For private circulation only

Book Post

# கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள்



www.tchsportal.co.in

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

• ஆகஸ்ட் 2020 • இதழ் 3

## கிறிஸ்தவமும் விடுதலையும்






# பன்னாட்டுக் கிறித்துவத் தமிழ் இலக்கிய ஆராய்ச்சி நிறுவனம்

International Christian Tamil Literature Research Institute

பன்னாட்டு அளவில்
படைப்பிலக்கியவாதிகளை
ஒருங்கிணைக்கும் உன்னத தளம்!

கிறித்தவ இயல், இசை, நாடக
கலைஞர்களுக்கு களம் அமைத்துத்தரும்
கருத்தியல் சங்கமம்!



**Rt.Rev.Prof.Dr.L.ஜோசப் மோகன் குமார்**

பேராயர் & வேந்தர்

தபால் பை எண்: 5313
கோடம்பாக்கம். சென்னை–600024
தென்இந்தியா
பேச: 9840785378
இ.மெயில்: bishopjmk@gmail.com
www.ictlri.org

கிறிஸ்தவ
# வரலாற்று சுவடுகள்




**அலுவலக முகவரி**
கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள்,
கதவு எண் 2-2-3(4),வடக்குத்தெரு,
பங்களா சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (திருநெல்வேலி)

மின்னஞ்சல்: christianhistorical@gmail.com
தொலைபேசி: +91 9176780001
+91 7538812218


## உள்ளே



## மாத இதழுக்காக சந்தா விபரம்

| | |
|---|---|
| மாத சந்தா | ரூ 60/- + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ரூ 600/- + நன்கொடை |
| ஆயுள்சந்தா | ரூ 6000/- + நன்கொடை |






Bank :- Federal Bank
Account name :- Tinnevelly Christian Historical Society
Account number :- 17480200003684
IFSC Code :- FDRL0001748

பணம் செலுத்திய பின்பு செலுத்திய விபரத்தையும் உங்களுடைய முகவரியையும் மறக்காமல் கிழே கொடுக்கப்படுள்ள தொலைபேசி அல்லது மின்னஞ்சல் முகவரி மறக்காமல் தெரிவிக்க அன்புடன் தெரிவித்துக்கொள்கின்றோம்.


மின்னஞ்சல்: christianhistorical@gmail.com
தொலைபேசி: 04633 290401, 04633 261101
www.tchsportal.co.in




கிறிஸ்துவுக்குள் அன்பான இறைமக்கள் அனைவருக்கும் ஆண்டவர் இயேசு கிறிஸ்துவின் ஈடு இணையற்ற நாமத்தில் அன்பின் நல்வாழ்த்துக்கள் மற்றும் வணக்கங்கள்

நமது கிறிஸ்தவ வரலாற்று சங்கமானது 10 அம்ச செயல் திட்டங்களோடு மிகச்சிறப்பாக செயல்பட்டு வருகிறது. அந்த 10 அம்ச செயல் திட்டங்கள் கடந்த ஜூன் மாத ஆய்வு இதழிலும் ஜூலை மாத ஆய்வு இதழிலும் பட்டியலிடப்பட்டது. 10 அம்ச செயல் திட்டத்தில் முக்கிய செயல் திட்டமான மாதாந்திர ஆய்விதழ் வெளியிடும் பணியில் நமது ஆய்விதழின் பதிப்பாசிரியர் அன்பிற்குரிய தம்பி திரு .மன்னா செல்வகுமார் அவர்களும் ஆய்விதழின் வடிவமைப்பாளர் அன்புக்குரிய தம்பி குருத்துவ கல்லூரி மாணவர் சுஜித் ரெக்ஸ் அவர்களும் சிறப்பாக செயல்பட்டு குறித்த நேரத்தில் முதலாவது, இரண்டாவது மாதாந்திர ஆய்விதழ்கள் வெளிவரும் படி செய்தார்கள் இந்த மூன்றாவது மாதாந்திர ஆய்விதழும் சிறப்பாக வெளிவரும்படி செய்துள்ளார்கள். அவர்களோடு இணைந்து இப்பணியைச் செய்திட ஆண்டவர் எனக்கு கிருபை செய்தார். ஆண்டவருக்கு மிகுந்த நன்றி செலுத்துகிறேன்.

இம்மாத நமது மாத இதழ் ஒவ்வொரு மாதத்திலும் நம்முடைய சங்கத்தின் இந்த மாதாந்திர ஆய்விதழ் ஒரு குறிப்பிட்ட தலைப்பின் கீழ் வெளிவர உள்ளதை கடந்த மாத இதழில் தெரிவித்தோம். முதலாவது ஆய்விதழ் தென்னாட்டு கிறிஸ்தவம் என்ற தலைப்பிலும் இரண்டாவது ஆய்விதழ் கிறிஸ்தவமும் விழாக்களும் என்ற தலைப்பிலும் வெளிவந்தது. இம்மாத ஆய்விதழ் கிறிஸ்தவமும் விடுதலையும் (விடுதலை வாழ்வில் கிறிஸ்தவம்) என்ற தலைப்பின் கீழ் வெளியிடப்படுகிறது. அடுத்த மாதம் செப்டம்பர் மாதம் தென் தமிழ்நாட்டில் நற்செய்தி அறிவிப்பு மாதமாக செப்டம்பர் மாதம் பழங்காலம் முதல் ஆசரிக்கப் பட்டு வருகிறது. இம்மாதத்தில் சுவிசேஷம் அறிவிக்கும் பணிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. ஆண்டுதோறும் அனுசரிக்கப்படும் சுவிசேஷ ஞாயிறு செப்டம்பர் மாத ஞாயிற்றுக்கிழமைகள் ஏதாவது ஒன்றில் ஆசரிக்கப்படுகிறது. ஆதலால் அடுத்த மாதம் நமது ஆய்வு இதழின் தலைப்பு கிறிஸ்தவமும் நற்செய்தி அறிவிப்பும் இதற்கான வரலாற்றுக் கட்டுரைகளை செப்டம்பர் 15 க்குள் நமது மாத இதழின் பதிப்பாசிரியர் அவர்களுக்கு அனுப்பி வைக்க அன்புடன் வேண்டுகிறேன். அதேபோன்று நமது மாத இதழுக்கான சந்தாவையும் பதிப்பாசிரியர் அவர்களுக்கு அனுப்பி உதவிட அன்புடன் வேண்டுகிறேன்.

**முற்பிதாக்களின் கால விடுதலைப் பயண வாழ்வு**

முற்பிதா ஆபிரகாமின் தந்தை தேராகு வாழ்ந்த மெசபடோமியா பகுதி, ஊர் பட்டணம் போன்றவை சிலைவழிபாடு மிகுந்த இடங்கள். ஆபிரகாமின் முன்னோர்கள் சிலைகளை செய்பவர்களாக, அவற்றை விற்பனை செய்பவர்களாக, சிலை வழிபாட்டில் தீவிரம் காட்டியவர்களாக காணப்பட்டதாக வரலாற்று ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். மேலும் அந்த பகுதியில் சூரிய வழிபாடு செய்தவர்களுக்கும் சந்திர வழிபாடு செய்தவர்களுக்குமிடையே பெரும் மோதல் அக்காலத்தில் ஏற்பட்டதாகவும் ஆதலால் இடப்பெயர்ச்சிகள் நடைபெற்றதாகவும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். வேதாகமத்தில் முற்பிதாக்களான ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகிய மூவரும் ஆண்டவராகிய யாவே கடவுள் வழிபாட்டுக்கு மாறாக சிலை வழிபாட்டு அடிமைத்தனம் உள்ள பகுதியில் இருந்து தங்களது குடும்பத்தினரை எல்லாம் அழைத்துக்கொண்டு தனியான வசிப்பிடம் நாடி நீண்ட பயணம் சென்று ஆண்டவருக்கு நன்றி பலி செலுத்தி விழா எடுத்து விடுதலை வாழ்வுக்காக தனித்து தங்கி வாழ்ந்த சம்பவங்களை வேதாகம தொடக்க நூலில் (ஆதியாகமம்) காண்கிறோம்.

**இஸ்ரவேலரின் வனாந்திர விடுதலைப்பயண வாழ்வு**

யோசேப்புக்கு எகிப்தில் கிடைத்த உயர் பதவியின் காரணமாக அவரது தகப்பனார் யாக்கோபு, அவரது 11 சகோதரர்கள் மற்றும் குடும்பத்தினர் எகிப்து சென்று குடியேறினர். தலைமை அமைச்சராக இருந்த யோசேப்பையும் அவர் எகிப்து நாட்டிற்கு செய்த நன்மைகளையும் அறிந்த தலைமுறையினர் அனைவரும் மரணம் அடைந்த பின்பு யோசேப்பை அறியாத புதிய தலைமுறை எழும்பியது யோசேப்பை அறியாத புதிய அரசர் எகிப்தின் ஆட்சியாளர் ஆனார் அக்காலத்தில் இஸ்ரவேல் ஜனங்கள் எகிப்தில் அடிமைகளாக நடத்தப்பட்டார்கள். சுமார் 430 ஆண்டுகாலம் அடிமைத்தன சிறையிருப்பு வாழ்வில் இஸ்ரவேல் ஜனங்கள் மிகவும் கஷ்டப்பட்டார்கள் விடுதலைக்காக ஏங்கினார்கள் ஆண்டவர் விடுதலை தலைவராக மோசேயை எழுப்பினார் அற்புத அடையாளங்கள் மூலம் எகிப்திலிருந்து விடுவிக்கப்பட்ட இஸ்ரவேலர்கள் கானான் நாட்டிற்கு வந்தார்கள். ஆண்டவரால் விடுதலை வாழ்வை பெற்றுக் கொண்டார்கள்.

**நீதித்தலைவர்களின் காலத்தில் விடுதலை வாழ்வு**

எகிப்திலிருந்து ஆண்டவருடைய பெரிதான கிருபையினால் விடுதலைபெற்று நாற்பது ஆண்டு வனாந்தர பயணத்தை கடந்த இஸ்ரவேல் ஜனங்கள் அதன்பின் யோசுவாவாலும் அவருக்குப் பின் வந்த நீதித்தலைவர்கள் எனும் நியாயாதிபதிகள்

மூலமும் வழி நடத்தப்பட்டார்கள் அந்த காலகட்டத்தில் யாவே கடவுளுக்கு விரோதமாக பாவம் செய்த போதெல்லாம் அவர்களைச் சுற்றி வாழ்ந்த பிற இனத்தவரால் அடிமைப் படுத்தப் பட்டார்கள் விடுதலை வாழ்வை அவர்களால் சுதந்திரமாக அனுபவிக்க முடியவில்லை. பிற இனத்தவரின் அடக்குமுறைகள் அதிகமானபோது தமது பாவ வழிகளை விட்டு அவர்கள் மனந்திரும்பி தூய வாழ்வுக்கு நேராக திரும்பிய போது ஆண்டவர் பிற இனத்தவரிடம் இருந்து அவர்களுக்கு விடுதலையைக் கொடுத்து விடுதலை வாழ்வை அனுபவிக்க கிருபை செய்தார். தீர்க்கதரிசி சாமுவேல் காலத்திலும் இதுபோன்றே நடைபெற்றது.

**அரசர்களின் காலத்தில் விடுதலை வாழ்வு**

பேரரசர் சவுல், தாவீது, சாலமோன் மற்றும் அவர்களை தொடர்ந்து வந்த அரசர்கள் காலத்திலும் இறைமக்கள் பாவம் செய்கிற போது பிற இனத்தவரால் அடிமைப் படுத்தப்பட்டார்கள் அடிமைப்படுத்தப்பட்ட இறைமக்கள் மனந்திரும்பி ஆண்டவரண்டை திரும்பி வந்தபோது ஆண்டவர் விடுதலை வாழ்வை அவர்களுக்கு வழங்கி இரக்கம் பாராட்டினார்.

**பெரிய தீர்க்கதரிசிகள், சிறிய தீர்க்கதரிசிகள் காலத்தில் விடுதலை வாழ்வு**

ஏசாயா, எரேமியா, எசேக்கியேல் போன்ற பெரிய தீர்க்கதரிசிகள் காலத்திலும் அவர்களுக்குப் பின்வந்த சிறிய தீர்க்கதரிசிகள் காலத்திலும் ஆண்டவருடைய ஜனங்கள் பாவம் செய்தபோது அடிமைப்படுத்தப் பட்டார்கள். 70 ஆண்டு காலம் பாபிலோனிய சிறையிருப்பில் அடிமைகளாக வாழ்ந்தார்கள் பாவ வாழ்வில் இருந்து அவர்கள் மனம் திரும்பிய போது விடுதலை வாழ்வை பெற்றுக் கொண்டார்கள்.

**கிறிஸ்தவம் ஓர் விடுதலை இறையியல்**

கிறிஸ்தவம் அனைத்து அடிமைத்தனங்களில் இருந்தும் விடுதலையை வழங்குகிற ஒரு சிறப்பு மார்க்கமாகும். ஆதலால்தான் கிறிஸ்தவத்தையும் அதன் சித்தாந்தங்களையும் விடுதலை இறையியல் என அழைக்கிறார்கள். ஆவிக்குரிய பார்வையிலும் சமூகவியல் பார்வையிலும் கிறிஸ்தவம் விடுதலை இறையியல் தத்துவத்தை வழங்குவதை நாம் கண்கூடாக காணலாம்.

**கிறிஸ்தவமும் விடுதலை வாழ்வும்**

கிறிஸ்தவமும் விடுதலை வாழ்வும் ஒன்றோடொன்று இணைபிரியாதவை ஆகும். தொடக்க காலம் முதல் இன்று வரை கிறிஸ்தவத்தை பிற மக்களுக்கு அறிவிக்கச் என்ற கிறிஸ்தவ மிஷனரிகள் அடிமைப்பட்டுக் கிடந்த மக்களுக்கு கிறிஸ்தவ போதனைகளை அளித்ததோடு அடிமைத்தன வாழ்விலிருந்து விடுதலை பெறும் வழிவகைகளையும் காண்பித்தார்கள். ஐரோப்பா, ஆசியா, ஆப்பிரிக்கா, வட அமெரிக்கா, தென் அமெரிக்கா, ஆஸ்திரேலியா ஆகிய அனைத்து கண்டங்களிலும் அடிமை அதிகாரத்திற்கு உட்பட்டு வாழ்ந்த அனைவரும் விடுதலை வாழ்வை பெற்றுக்கொண்டார்கள் ஐரோப்பிய வியாபாரிகள் அடிமை வியாபாரத்தை ஆதரித்து முயற்சிகள் மேற்கொண்ட போதும் ஐரோப்பிய மிஷனரிகள் பிற மக்களை விடுதலை வாழ்வுக்கு நேராக வழி நடத்தினார்கள்.

ஜான் ஜி பேட்டன் என்ற மிஷனரி மூலம் ஆஸ்திரேலியாவை ஒட்டி உள்ள பசிபிக் பெருங்கடலில் இருந்த நியூஹெப்பரட்டிஸ் தீவுக் கூட்ட மனிதர்களை மனிதர்களே சாப்பிடும் நர மாமிச பட்சிணிகளான மக்கள் கூட்டத்தினர் விடுதலை வாழ்வை பெற்றுக் கொண்டார்கள் இதேபோன்று வடகிழக்கு இந்தியா வில் நாகலாந்து, மிசோரம், மேகாலயா, மணிப்பூர் போன்ற மாநிலத்தில் மனிதர்களை மனிதர்களே சாப்பிட்டு வந்த மக்கள் கூட்டத்தினர் அமெரிக்க பாப்டிஸ்ட் மிஷனரிகள் மூலம் மானிட இயல்பு நிலைக்கு திரும்பி விடுதலை வாழ்வைப் பெற்றுக் கொண்டார்கள்,

**சாதீய அடிமைத்தனத்திலிருந்து விடுதலை வாழ்வை தந்த கிறிஸ்தவம்**

இந்தியாவின் சாபக்கேடு களில் ஒன்று சாதிய அடிமைத்தனம், பிறப்பின் அடிப்படையில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பாகுபாட்டை மனுதர்ம சாஸ்திர அடிப்படையில் கொடுக்கக்கூடிய சாதி வேற்றுமை பல்லாயிரம் ஆண்டுகளாக இந்தியாவில்புரையோடிப் போயிருக்கிறது. இந்த சாதிய அடிமைத்தனத்தில் இருந்து விடுதலை வாழ்வை பகிர்ந்தளித்த பெருமை கிறிஸ்தவத்தைத் தான் சேரும்.

வட தமிழ்நாட்டில் சாதிய அடிமைத்தனத்திலிருந்து கிறிஸ்தவம் கொடுத்த விடுதலை வாழ்வு

தமிழ்நாட்டிற்கு முதன் முதலாக வந்த பிராட்டஸ்டண்ட் மிஷனரிகள் ஆன சீகன்பால்க், புளுச்சோ ஆகியோர் வட தமிழகத்தில் காவிரி டெல்டா வட்டாரத்தைச் சார்ந்த தரங்கம்பாடியை பணித்தளமாகக் கொண்டு செயல்பட்டனர். சாதிய அடிமைத்தனம் காரணமாக கல்வி பயிலும் வாய்ப்பை இழந்து நின்றிருந்த தாழ்த்தப்பட்ட மக்களை பள்ளிக்கூடங்களுக்கு வரவழைத்து அவர்களுக்கு மதிய உணவு அளித்து கல்வியை அளித்தனர் இதனால் பிற இன மக்கள் கிறிஸ்தவத்திற்கு வருவதில் தயக்கம் காட்டிய போதும் அது குறித்து கவலைப்படாமல் சாதி பேதமற்ற சமத்துவ சமுதாயத்தை நிர்மாணிப்பதில் சீகன்பால்க் தன்னிகரற்றவராகவே விளங்கினார். சாதாரண மக்களுடைய மொழிநடையில் தூய வேதாகமத்தை அவர் தமிழில் மொழி பெயர்த்தார். இன்றைய திருச்சி - தஞ்சாவூர் திருமண்டலத்தில் கிறிஸ்தவர்கள் வலுவாக இருக்கும் ஒரு வட்டாரம் தாராபுரம் வட்டாரம் சுமார் 100 ஆண்டுகளுக்கு முன்பாக தாழ்த்தப்பட்ட சமூகத்தின் இரு பிரிவு மக்கள் பெருந்திரளாக கிறிஸ்தவத்தை ஏற்றுக்கொண்டார்கள். அந்த வட்டாரத்தில் அவர்களை ஒடுக்கி வந்த உயர் வர்க்க மக்கள் மத்தியில் நூறு ஆண்டுகளுக்கு முன்பு மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் (கும்பல் இயக்கம்) ஆக கிறிஸ்தவத்தை ஏற்ற அவர்கள் இன்றைய தினம் பொருளாதாரத்தில் உயர்ந்து தலைநிமிர்ந்து நிற்கிறார்கள். இதேபோன்று தற்போதைய வேலூர் திருமண்டலத்தில் நேமூர், முட்டத்தூர், செஞ்சி, வட்டாரங்களில் பிற சமூகத்தினரால் ஒடுக்கப்பட்டு வந்த தாழ்த்தப்பட்ட மக்கள் பெருந்திரளாக கிறிஸ்தவத்தை ஏற்றார்கள். சமத்துவ வாழ்வை கிறிஸ்தவத்தின் மூலம் பெற்றுக் கொண்ட அவர்கள் பொருளாதாரத்தில் அசைக்கமுடியாத சக்தியாக இன்று அங்கு திகழ்கிறார்கள்.

**தென் தமிழ்நாட்டில் சாதிய அடிமைத்தனத்திலிருந்து கிறிஸ்தவம் கொடுத்த விடுதலை வாழ்வு**

ஆலயங்களின் நுழையும் உரிமை இல்லை, ஆலய தெருக்களில் நடக்கும் உரிமை இல்லை, தேர் வடம் பிடித்து இழுக்கும் உரிமை இல்லை, குடை பிடித்து செல்ல உரிமை இல்லை, காலணிகள்/மிதியடிகள் போட்டுச் செல்ல உரிமை இல்லை. தென் திருவாங்கூர் சமஸ்தானத்தில் (

இன்றைய கன்னியாகுமரி திருவனந்தபுரம் மாவட்டங்கள்) வீட்டில் மேற்கூரையாக ஒடு போடும் உரிமை இல்லை நாற்காலி வைத்துக் கொள்வதற்கும் நாற்காலியில் அமர்வதற்கும் உரிமை இல்லை பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட பெண்கள் தங்களது மார்பகத்தை மறைத்து உடையணிய (தோள் சீலை / மேலாடை அணிய) உரிமை இல்லை கல்வி பயில உரிமை இல்லை ஆலய கோபுரங்களை தூரத்திலிருந்து பார்த்து கோபுர தரிசனம் மாத்திரம் தான் செய்ய முடிந்தது இவ்வாறு சென்று கொண்டிருந்த இன்றைய திருநெல்வேலி, தூத்துக்குடி., தென்காசி, விருதுநகர், கன்னியாகுமரி மாவட்டம் உள்ளிட்ட தென் தமிழ்நாட்டுமக்கள் SPCK,CMS,SPG,LMS போன்ற மிஷினரி சங்க மிஷனரிகளால் சமத்துவ நாயகராம் ஆண்டவர் இயேசு கிறிஸ்துவை தெய்வமாக ஏற்று 200 ஆண்டுகளுக்கு முன் கிறிஸ்தவர்கள் ஆனார்கள், விடுதலை வாழ்வை பெற்றுக்கொண்டார்கள் தூரத்தில் இருந்தவாறே கோபுர தரிசனம் செய்து வந்த அவர்கள் தேவாலய கருவறையிலிருந்து பிறருக்கு ஆசி வழங்கும் குருக்களாக உயர்ந்ததோடு தாம் சார்ந்திருந்த சமூகத்தையும் கல்வி பொருளாதாரத்தில் உயர்த்திக் கொண்டார்கள் பழக்க தோஷம் காரணமாக தாங்கள் வழிபட கட்டிக்கொண்ட தேவாலயங்களில் எல்லாம் உயர்ந்த கோபுரங்களையும் அவர்கள் கட்டிக்கொண்டார்கள் இன்றைய தினத்தில் தென்மாவட்டங்களுக்கு நாம் செல்கிற போது அங்குள்ள தேவாலயங்கள் எல்லாம் உயர்ந்த கோபுரத்தைக் கொண்டதாக இருப்பதன் பின்னணி இது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். இதன் பின்னணியில் மாபெரும் வரலாறு மறைந்திருக்கிறது என்பதை புரிந்து கொள்ள வேண்டும். அக்காலத்து மிஷனரிமார்களும் உயர்ந்த கோபுரங்களை கட்டிக்கொள்ளும் தென் மாவட்ட மக்களின் ஆசையை தடைசெய்யவில்லை முதன்முதலாக தேவாலயத்தில் உயர்ந்த கோபுரம் கட்டுகிற முயற்சிக்கு அடிகோலியவர் தென்நெல்லை அப்போஸ்தலர் என புகழ்ந்து உரைக்கப்படும் Rev.ஜான் தாமஸ் ஐயர் அவர்களாவார். திருச்செந்தூர் வட்டாரத்திலுள்ள மெஞ்ஞானபுரம் கிராமத்தில் 192 அடி உயர கோபுரத்தை அங்குள்ள தூய.பவுல் தேவாலயத்தில் இவர் நிர்மாணித்தார் உலக அளவிலான மிகப்பெரிய அசன விருந்து இந்த மெய்ஞானபுரம் கிராம பவுல் தேவாலயத்தில் நடைபெற்று வருவது சிறப்புக்குரியதாகும். இக்கிராமத்தை அடுத்து முதலூர் கிராமத்தில் தூய மிகாவேல் தேவாலயத்தில் 185 அடி உயர தேவாலய கோபுரமும், நாசரேத் நகரில் தூய. யோவான் பேராலயத்தில் 175 அடி உயர தேவாலய கோபுரமும் நிர்மாணிக்கப்பட்டது.

**விடுதலை வாழ்வுக்கு நேராக ரேனியஸ் ஐயர் அவர்களின் திருப்பணிகள்**

சாதிய அடிமைத்தனம் மற்றும் வன்கொடுமையில் இருந்து பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்களை விடுவிப்பதில் Rev. ரேனியஸ் ஐயரவர்கள் போன்ற தொடக்ககால மிஷனரிகள் தென்மாவட்டத்தில் மிகச் சிறப்பாக செயல்பட்டதால் பிற்படுத்தப்பட்ட தாழ்த்தப்பட்ட மக்கள் பெருந்திரளாக தென் தமிழகத்தில் கிறிஸ்தவத்தை ஏற்றுக்கொண்டார்கள். பிற்படுத்தப்பட்ட தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் வாழ்ந்த கிராமங்களில் எல்லாம் பள்ளிக்கூடங்கள் நிறுவுகிற சீரிய முயற்சிக்கு அடிகோலியவர் 200 ஆண்டுகளுக்கு முன்பாக 07.07 .1820 அன்று திருநெல்வேலியில் கால்பதித்த நெல்லை அப்போஸ்தலர் ரேனியஸ் ஐயர் அவர்களாவார் அவர் மூலமாக சுமார் 400க்கும் மேற்பட்ட கிராமங்களில் சபைகளும் 150 பள்ளிக்கூடங்களும் நிறுவப்பட்டன இதுவரை பள்ளிக்கூடங்களில் சேர அனுமதிக்கப்படாது இருந்த பிற்படுத்தப்பட்ட தாழ்த்தப்பட்ட சமூக மக்களின் குழந்தைகளுக்கு இந்த பள்ளிக்கூடங்களில் இலவசமாக கல்வி பயிலும் உரிமையை Rev.ரேனியஸ் ஐயரவர்கள் அவர்களுக்கு வழங்கினார்கள் இதற்காக அவர் மேற்கொண்ட முயற்சிகள் ஏராளம் ஏராளம். ரேனியஸ் வருவதற்கு முன்பு பாளையங்கோட்டையில் ராணுவ குருவாகவும் SPCK மிஷனரி சங்க திருநெல்வேலி மண்டல பொறுப்பாளராகவும் இருந்த Rev. ஹாப்வ்ஸ் ஐயர் அவர்களால் நடத்தப்பட்டு வந்த செமினரி எனப்படும் ஆசிரியர் மற்றும் சபை ஊழியர் பயிற்சி பள்ளியில் உயர் வகுப்பு மாணவர்கள் மட்டுமே படித்து வந்தனர் அந்த செமினரி பாளையங்கோட்டை வந்த Rev. ரேனியஸ் ஐயர் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. செமினரியை பொறுப்பெடுத்துக் கொண்ட ரேனியஸ் செய்த முதல் காரியம் பிற்படுத்தப்பட்ட தாழ்த்தப்பட்ட வகுப்பு மாணவர்களை அந்த செமினரியில் கல்வி பயில்வதற்கு அனுமதி அளித்து சேர்த்துக் கொண்டதாகும்இதனைக் கண்ட உயர் வகுப்பு மாணவர்கள் பிற்படுத்தப்பட்ட தாழ்த்தப்பட்ட வகுப்பு மாணவர்களோடு இணைந்து உணவு உட்கொள்ள மறுத்து விட்டனர் இதனை கண்ட ரேனியஸ் அவர்கள் அவர்களிடம் காணப்பட்ட சாதிப் பாகுபாட்டை வன்மையாக கண்டித்ததோடு சாதி வேறுபாட்டை எந்த வடிவிலும் பின்பற்ற மாட்டோம் என வாக்குறுதி அளித்தால் மட்டுமே செமினரியை தொடர்ந்து நடத்த முடியும் என உறுதிபட தெரிவித்தார். உயர் வகுப்பு மாணவர்கள் அதற்கு மறுப்பு தெரிவிக்க செமினரியை Rev.ரேனியஸ் மூடினார்.அடுத்த ஆண்டு செமினரியைத் திறந்த Rev.ரேனியஸ் சாதிபாகுபாட்டை எந்த வடிவத்திலும் பின்பற்ற மாட்டோம் என வாக்குறுதி எழுதிக்கொடுத்தவர்களை மட்டுமே செமினரியில் சேர்த்து சமூக நீதியை அன்றே நிலைநாட்டினார்.

நாம் இணைந்து உழைப்போம் இழந்த வரலாறுகளை மீட்டெடுத்து புதிய வரலாறு படைப்போம்

ஜான் ஞானராஜ்
கிறிஸ்தவ வரலாற்று சங்கம்
திருநெல்வேலி



ரெக்ஸ்




**வேதாகமத்தை ஆதாரமாக கொண்டது**

நம்முடைய ஆராதனை முறைமைகளில் இருக்கும் நூற்றுக்கு என்பது சதவிகிதம் வேதத்தில் இருக்கும் வேத வசனங்கள் மட்டுமே. எந்த ஒரு மறு விளக்கமும் கொடுக்காமல் அதை அவ்வாறே சொலுவது நம் முறைமையின் சிறப்புகள். காலை, மாலை ஆராதனை, திருவிருந்து, ஞானஸ்நானம் எந்த ஆராதனை முறைமை ஆகினும் நாம் வாசிப்பது, பாடலாக படிப்பது என்று அத்தனையும் அப்படியே வேத வசனங்களை கொண்டே இருக்கும். மற்ற எந்த தற்கால ஆராதனை முறைமைகளிலும் இத்தகைய வேத வசனம் கொண்ட ஆராதனை முறைமையை நம்மால் காண்பது கடினம்.

**ஆதி விசுவாசத்தை ஆதாரமாக கொண்டது**

இது பெரும்பாலான ஏபிஸ்டோஸ்கோபி சபைகள் முன்னெடுக்கும் ஒரு காரணம். நாம் இன்று செய்யும் ஆராதனை வழி முறைமைகள் ஆதிகாலத்தில் இருந்தே கிறிஸ்தவர்களால் பின்பற்றப்பட்டது. ஆம் கலாச்சாரத்திக்கு ஏற்ப சில மாறுபாடுகள் இருந்தாலும் பெரும் பங்கை நாம் வழி வழியாக பின்பற்றி கொண்டு வருகிறோம். இந்த வழிமுறைகள் நமக்கு நம்முடைய கலச்சாரத்திகும் அதிகமான வேதத்தின் கலாச்சாரத்துடன் இணைக்கிறது. ( பரிசுத்த தேவனே நித்தியமானவா என்னும் நற்கருணை பாடலின் வேர் இரண்டாம் நூற்றாண்டில் இருந்து ஆரம்பிக்கிறது). மேலும் பழங்காலத்தில் ஆதி கிறிஸ்தவர்கள் கொண்டிருந்த நம்பிக்கையை கடத்துகிறது ( ரோமன் கத்தோலிக்க புரட்சி அக்காலத்தில் இருந்த சில மூட நம்பிக்கைகளை எதிர்த்தது தவிர ஒட்டுமொத்த வரலாற்றை அல்ல, நம்முடைய பல சித்தாந்தங்கள் வழி வழியாய் போதிக்கபட்டு வந்தவை)

**சத்தியத்தை ஆதாரமாக கொண்டது**

இது ஒரு முக்கியமான காரணம். உணர்ச்சிகளுக்கு உட்பட்டு தேவனை ஆராதிப்பதை தவிர்த்து உண்மையான சத்தியத்தை அறிந்து உண்மையின் வடிவாக தேவனை அறிய வழிவகுக்கும். இங்கு உணர்ச்சிகள் என்பது ஒரு தற்காலிக உணர்சிகள் அதாவது தற்காலத்தில் ஆராதனை கூடங்கள் என்று தனியே நடத்தப்படுவதை கேள்விப்பட்டு இருப்பிர்கள் அதில் வெளிப்படும் ஒரு தற்காலிக உணர்ச்சியை குறிக்கிறேன். அவைகள் வேதத்தை வாசிக்கும் பொது தேவனால் வெளிபடுத்தப்படும் சத்தியங்களை குறிக்காது. மக்கள் தங்கள் தங்களின் நினைப்புகேர்ப்ப சபையின் போக்கை மாற்றும் போது சபையின் மக்களுக்கு தங்களின் மீதான நம்பிக்கை வலுபடுமே அன்றி வேதத்தின் அடிப்படையில் வலுவூட்டம் இருக்காது . தற்கால வாலிபர்களை இந்த முறைமை ஈர்க்காது என்ற ஒரு கருத்து. ஆம் ஈர்க்காது. ஏன் என்றால் முழுக்க முழுக்க வேத வசனங்களை கொண்டுள்ள முறைமைகள் ஒருபோதும் வேத வாசிப்பை கடமையாக்கி கொள்ளத மனிதர்களுக்கு ஈர்ப்பு அளிக்காது. கர்த்தர் நல்லவர் என்பதை ருசித்து பார்க்கவேண்டும். எப்படி ? வேதத்தின் முலமே ..

**மக்களை ஆதாரமாக கொண்டது**

சபைகளில் மக்களுக்கான மன்றாட்டை ஏறெடுக்கும் போது அறியாமையினாலும், ஞாபக குறைவுகளினாலும் சில மன்றாட்டை ஜெபத்தில் விட்டுவிடகூடும். அப்படிப்பட்ட ஜெபங்கள் மக்களின் மனக்குறைகளை நீக்காமல் ஜெபம் பண்ணுகிறவர்களின் சுயவிருப்பத்தை வெளிபடுத்துவதாய் அமையலாம். இக்குறைகளை களையும் விதமாயும் சபையார் அனைவரும் நிதானிப்போடு ஏகமனதாய் ஒருமனப்பட்டு ஜெபிக்கவும் ஜெபபுஸ்த்தகம் உதவுகிறது. தலையாகிய கிறிஸ்துவுக்குள் நாமெல்லாரும் அவயங்கள் என்பதை உலகமெல்லாம் உள்ள திருச்சபைக்கு பொதுவான ஜெபமுறைமை நினைப்பூட்டுகிறது. ஜெபபுஸ்தகமானது உலகின் பல மொழிகளில் ஒரே விசுவாசத்தை பிரதிபலிக்கும் விதமாய் அமைந்திருப்பது இதன் தனிச்சிறப்பு ஆகும்.

தொடரும் ...

# பெண்ணின விடுதலைப் போரில்

# ஏமிக்கார்மைக்கேல்!

Dr. ஜான்சிபால்ராஜ்
வன்னியன்குடியிருப்பு

**இந்தியப் பெண் விடுதலைக்காகப் பாடுபட்டவர்களுள் அயர்லாந்து நாட்டுப் பெண்ணான ஏமிக்கார்மைக்கேல் முதன்மையானவர்.**

19 ம் நூற்றாண்டின் இறுதியில் இந்தியாவிற்கு கிறிஸ்தவ சமயப் பணிக்கென்று வந்த இவரை இச்சமூகம் தன்னைச் சுத்திகரிக்கும் பணிகளில் பயன்படுத்திக் கொண்டது. கி.பி.1895 ம் ஆண்டு சென்னைக்கு வந்து சேர்ந்த இவர் தமிழகத்தில் தனது பணியைச் செய்வதென்ற முடிவில் திருநெல்வேலி மாவட்டத்தில் பண்ணைவிளை என்ற ஊரில் ஏற்கெனவே அங்கு கிறிஸ்தவச் சமயப்பணி செய்துக் கொண்டிருந்த மிஷனரி உவாக்கர் தம்பதியினரோடு இணைந்து தமது சமயப்பணியினை பெண்களிடையே மேற்கொண்டார்.



சுற்றுவட்டார கிராமங்களில் தாம் கொணர்ந்த சமய நம்பிக்கைகளை அளிக்க விளைந்த போது தான், இச்சமூகத்துப் பெண்களின் அவலநிலைகள் அவரை வெகுவாகப் பாதித்தன. அதனிமித்தம் மிகவும் மனமுடைந்த அவர் முதலில் அவர்களுக்கு இச்சமூகத்தின் கோரப்பிடியில் இருந்து விடுதலை தான் தேவை என்பதை உணர்ந்தார். தாம்வசித்தபகுதிகளைச்சுற்றின கிராமங்களின் தெருக்களில் அடிமைகளாக வாழ்ந்த பெண்களின் நிலைமைகளை மாற்றும் முயற்சியில் இறங்கினார் . ஆறேழு வயதுகளிலேயே திருமணம் செய்து வைக்கப்படும் பெண் குழந்தைகளின் பரிதாப நிலையையும் அதனால் அவர்களடைந்த சொல்லொண்ணா துயரங்களையும் கண்டு வெகுண்டார். அவர்களுள் சின்னஞ்சிறு வயதுகளிலேயே கைம்பெண்களாகி வாழ்நாளெல்லாம் சித்திரவதைக்குள்ளாகும் பரிதாப நிலைமையும் ஏமிக்கார்மைக்கேலை வெகுவாகப் பாதித்தது. அத்தகையோரை கிராமம் கிராமமாகச் சென்று கிறிஸ்துவின் அன்பை எடுத்துக் கூறி , பிறர் முகம் பார்க்க கூடாதென்ற சமூகக்கட்டுக்குள் கிடந்த பெண்களை தனது ஆதரவான பேச்சாலும் உதவிகளாலும் விழிப்புணர்வை ஏற்படுத்தினார். கலாச்சாரம், பண்பாடு என்ற கட்டுக்குள் பெண்களை அடிமைப்படுத்தியவற்றிலிருந்து வெளியில் கொண்டு வந்தார். அவரது அறிவுரைகளைஏற்று அவரோடு இணைந்து சமூகப் பணியாற்ற விரும்பிய பெண்களைத் தம்மோடு சேர்த்துக் கொண்டு தமது சமூகப்பணியையே மகத்தான சமயப்பணியாக உணர்ந்து செயல்பட்டார். சொந்த குடும்பத்தாராலும் சமூகத்தாலும் புறந்தள்ளப்பட்டப் பெண்கள் ஏமிக்கார்மைக்கேலுடன் இணைந்து கொண்டனர். துயரம் நீங்கி மனதளவில் விடுதலையடைந்த அப்பெண்களுக்கென்று காப்பகம் ஒன்றை ஏற்படுத்தி அவர்களோடு வாழ்ந்தார். அக்காப்பகம் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள நாங்குநேரி தாலுகாவில் உள்ள டோனாவூர் என்ற ஊரில் இன்றுவரை அவரது சமூகப்பணிக்கு உயிருள்ள சாட்சியாக உள்ளது.

அத்தோடு சமயச்சடங்கு என்ற பெயரில் பக்தியின் வேடம் பூண்டு பெண்களைப் பாலியல் வன்கொடுமைக்குள் தள்ளிய "தேவதாசி முறை" என்று அழைக்கப்பட்ட இந்திய சமயச் சடங்கிலிருந்து அப்பெண்களை மீட்டெடுத்து அக்கொடிய முறையை எதிர்த்துக் குரல் கொடுத்தவர் ஏமிக்கார்மைக்கேல் தான்.

இத்தேவதாசி முறையாவது, தேவன்+ தாசி இறைவனுக்கு அடிமை என்ற பொருளில் கோவில்களில் இருந்த விக்கிரகங்களுக்கு தொண்டு செய்ய பெண் பிள்ளைகளை அர்ப்பணிக்கும் நோக்கோடு ஆரம்பத்தில் ஏற்படுத்தப்பட்ட ஒரு சமயம் சார்ந்த நடைமுறையாகும்.

தெய்வத் தொண்டு செய்வதற்கென்று வீட்டிற்கு ஒரு பெண் குழந்தையை நேர்ந்து விடுவது... அக்குடும்பம் சொர்க்கத்தில் தப்பாமல் இடம்பிடிக்கும் என்றும் இம்மையிலும் சிறப்போடு வாழும் என்றும் மக்களை நம்ப செய்திருந்தது அச்சமூகம். இதன்படி கோவிலுக்கென்று விடப்பட்ட குழந்தை ஏழுவயது முதல் பதினொரு வயதிற்குள் அவள் பூப்பெய்தும் முன் கோவில் பூசாரியால் மங்களநாண் (தாலி) அணிவிக்கப்பட்டு அக்கோவிலில் உள்ள விக்கிரகத்திற்கு மனைவி என்ற அந்தஸ்தோடு அழைத்துச் செல்லப்படுவாள். இந்நிகழ்வு "பொட்டுக்கட்டுதல்" எனப்படுகிறது.

இதன்பிறகு அவள் அக்கோவிலில் தான் இருந்தாக வேண்டும். அவளது பணிகளாக கோவிலைச் சுத்தம் செய்வது, விளக்கேற்றுவது, மாலைகள் கட்டுவது போன்றவை அளிக்கப்படும். அவளுக்கு இசையும் நாட்டியமும் கற்பிக்கப்படும். இவர்கள் அக்கோவில் திருவிழாக் காலங்களிலும் வேறு விசேஷித்த நாட்களிலும் விக்கிரகங்கள் எடுத்துச் செல்லப்படும் போது

நடனமாடுவர். இதனால் இவர்கள் "ஆடல் மகளிர்" எனவும் அறியப்பட்டனர்.

இத்தகைய பணிகளுக்காக கோவில்களில் அர்பணிக்கப்பட்ட இத்தேவதாசியர் காலப்போக்கில் ஆட்சி மாற்றங்கள், அந்நியர் படையெடுப்பு, குறுநில மன்னர்களிடையே ஏற்பட்ட குழப்பநிலைகள் போன்ற மாற்றங்களால் கோவில் நிர்வாகம் மன்னர்களின்நேரடிபார்வையிலிருந்து விடுபட்டு கோவில்கள் அமையப்பெற்ற ஊர் பெரியவர்களின் பொறுப்பில் வந்தன. இந்நிலைக்குப் பின்னர் தேவதாசிகளின் வாழ்க்கை அந்த ஊர்ப் பெரிய மனிதர்களை நம்பியே இருக்க வேண்டிய கட்டாயத்திற்குள்ளானது. இதனால் அவர்களது (பெரிய மனிதர்களது) உடல் மற்றும் மனம் சார்ந்த அனைத்து தேவைகளையும் தேவதாசியரே பூர்த்திசெய்ய வேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப்பட்டனர். இதன் விளைவாக மெல்ல மெல்ல தங்கள் புனிதத் தன்மையை இழந்த தேவதாசியர் மக்களால் பொது மகளிராகவே பார்க்கப்படும் நிலையை அடைந்தனர். நாளடைவில் "தேவரடியாள்" என்று அழைக்கப்பட்ட அவர்கள் பின்னர் "தாசி" என்ற வசைச் சொல்லுக்கு ஆளாகும் நிலையை அடைந்தனர்.

18 ம் நூற்றாண்டில் ஐரோப்பியர்கள் இந்தியாவிற்குள் நுழையும்போது இத்தேவதாசியர்களின் நிலை மிகவும் இழிவானதாகவே இருந்தது. அந்நிலையில் தான் ஏமிக்கார்மைக்கேல் இந்தியா வந்தார்.

தேவதாசியரின் உண்மையான நிலைமையை அறிந்தும் தவறான நம்பிக்கைகளாலும் சமூகப் பண்பாட்டு அழுத்தங்களாலும் தம் பிள்ளைகளை தெய்வத்திற்கே அடிமையாக்குவதாகக் கருதி தொடர்ந்து நேர்ந்து விட்டுக் கொண்டு தான் இருந்தனர். சமூகத்தின் அந்நிலையை மாற்ற தனது பேச்சாலும் எழுத்துக்களாலும் விழிப்புணர்வை ஏற்படுத்தினார் ஏமிக்கார்மைக்கேல். அத்தகைய பெண் குழந்தைகளை தனது அறிவார்ந்த செயல்களால் மீட்டெடுத்து தனது காப்பகத்தில் வைத்துக் காப்பாற்றினார்.

இதனை ஏற்காத தேவதாசியால் பயனடைந்தோர் ஏமிக்கார்மைக்கேலை, சமயத்துரோகம் இழைப்பதாகவும் கலாச்சார சீரழிவிற்கு வித்திடுவதாகவும் குற்றம் சாட்டினர். அவர் மீது பொய்யான வழக்குகளும் போடப்பட்டன. அவற்றையெல்லாம் துணிச்சலோடு மேற்கொண்டு தனது நேர்மையான அணுகுமுறைகளாலும் உண்மையான செயல்பாடுகளாலும் வெற்றிக் கொண்டார்.

> **பெரிய மனிதர்களது உடல் மற்றும் மனம் சார்ந்த அனைத்து தேவைகளையும் தேவதாசியரே பூர்த்திசெய்ய வேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப்பட்டனர். நாளடைவில் "தேவரடியாள்" என்று அழைக்கப்பட்ட அவர்கள் பின்னர் "தாசி" என்ற வசைச் சொல்லுக்கு ஆளாகும் நிலையை அடைந்தனர்.**

பல நூற்றாண்டுகளாக இருந்துவந்த இத்தேவதாசி முறையினை எதிர்த்துப் போராடிய அயல்நாட்டுப் பெண்ணான ஏமிக்கார்மைக்கேலுக்குப் பின்னரே, சுமார் கால் நூற்றாண்டுகளுக்குப் பிறகே டாக்டர் முத்தலட்சுமி ரெட்டி, திருமதி. மூவலூர் இராமாமிர்தம் ஆகிய இந்தியப் பெண்களின் குரல்களும் இணைந்து தேவதாசிமுறைக்கு எதிராக ஒலிக்கத் தொடங்கின. இதன் விளைவாக 9-10-1947 ம் நாள் தமிழ்நாடு தேவதாசிகள் ஒழிப்புச் சட்டம் நிறைவேற்றப்பட்டது.

சமூகத்தைச் சீரழித்தும் சமூகத்தால் சீரழிக்கப்பட்டும் வந்த தேவதாசிகள் என்ற ஒரு சமூக அமைப்பையே வேரறுக்க முழுமுதற் காரணமாக அமைந்த ஏமிக்கார்மிக்கேலின் சமூகப்பணியினைப் பாராட்டி அன்றைய ஆங்கிலேய அரசு அவரைக் கௌரவித்துள்ளது. அதன்படி 1919 ஆம் ஆண்டு சென்னை ஆளுநராக இருந்த பென்ட்லாண்ட் என்பவர் மூலம் அவருக்குப் பதக்கம் அளிக்கப்பட்டது.

தாம் மீட்டெடுத்த, கைவிடப்பட்ட பெண்கள் மற்றும் தேவதாசியராக அர்பணிக்கப்பட்டு மீட்கப்பட்ட பெண் குழந்தைகளை வாழ்விக்க தனது முழு வாழ்வையும் அர்பணித்தவர். தனக்கென்று ஒரு குடும்ப வாழ்வை ஏற்படுத்திக் கொள்ளாத புரட்சிப்பெண் ஏமிக்கார்மைக்கேல் ஏற்படுத்திய டோனாவூர் காப்பகம் (Dohnavur Fellowship) இன்றும் தனியொரு சமுதாயமாக அவரது விடுதலைப் பணிக்குச் சாட்சியாக உள்ளது. அவரால் வளர்க்கப்பட்ட அநேகர் இன்றும் உலகெங்கும் பரவி அவர்தம் பெயரைப் பறைசாற்றி வாழ்ந்து வருகின்றனர்.

மக்கள் தொண்டினையே இறைத்தொண்டாகக் கருதி வாழ்ந்த ஏமிக்கார்மைக்கேல் தான், தமிழகத்தில் தேவதாசி முறையை எதிர்த்த முதல் பெண் என்ற உண்மையை தேவதாசி முறையைப் பற்றின ஆய்வுகளை நிகழ்த்தி வரலாற்றில் பதிவு செய்யும் வரலாற்றாசிரியர்கள் எவருமே தமது நூல்களில் குறிப்பிடவில்லை என்பதே வருந்தத்தக்க செயலாகும்.

> நான் என்னைக் காத்துக் கொள்ளாமல், உண்மையைக் காத்துக் கொள்ளும் வரைக்கும் இதே மன தைரியத்துடன் இருப்பேன்
>
> சீகன் பால்கு



# கிறிஸ்துவால் மட்டுமே



# விடுதலை



**திருமதி நிருபா ஜெசுவடியான்**
**சென்னை**

பதினெட்டாம் நூற்றாண்டில் தென்திருவிதாங்கூர் என்று அழைக்கப்பட்ட கன்னியாகுமரி மாவட்டத்தில் ஜாதி வெறி தலைவிரித்தாடியது. மன்னராட்சி நடந்த அக்காலத்தில் திருவிதாங்கூரை அரசாண்ட மன்னர்களில் பேரரசர் மார்த்தாண்டவர்மா மிகவும் முக்கியமானவராக கருதப்பட்டார். 1729 முதல் 1858 வரை அரசாண்ட இவர், திருவிதாங்கூரின் ஜூலியஸ் சீசர் என்று அழைக்கப்படுகிறார். திருவிதாங்கூரில் மொத்தம் 72 ஜாதியினரும், 1050 ஜாதி பிரிவினரும் இருந்ததாக வரலாறு கூறுகிறது. இவருடைய காலத்தில் தாழ்ந்த ஜாதி, உயர்ந்த ஜாதி என இம்மக்கள் இருவகையாக பிரிக்கப்பட்டு கொடுமைப்படுத்தப்பட்டனர். உயர் இனத்தவர் அருகே தாழ்ந்த ஜாதியினர் ஒருபோதும் வரக்கூடாது.மேலும், தாழ்ந்த ஜாதியினர் சமுதாயத்தில் அடிமைகளாகவே கருதப்பட்டனர். எந்தவித உரிமையமின்றி அரசாலும், உயர் இன மக்களாலும் புறக்கணிக்கப்பட்டனர். தீண்டாமை, நெருங்காமை, காணமுடியாமை ஆகியவற்றால் மக்கள் கஷ்டப்பட்டனர். அவர்களால் சமுதாயத்தில் விருப்பமான வேலைகளை தேட முடியாமல் தவித்தனர். நில உடைமையாளர்களின் வயல்களில் வேலை செய்யவும், இழிவான, அசுத்தமான பணிகளை செய்யவுமே வற்புறுத்தப் பட்டனர். ஓர் அடிமையின் குடும்பத்தில் பிறந்தவன் வாழ்நாள் முழுவதும் அடிமையாகவே வாழ்ந்து, அவன் இறக்கும்போது, இழிவான நிலையையே தன் சந்ததிக்கு வைத்து செல்லும் அவலநிலை காணப்பட்டது.

அடிமைகள் தெருவில், சாலையில் நடக்கும் போதும்பல கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. ஆடு, மாடு போன்ற விலங்கினங்கள் நடக்கும் வழிகளில் கூட மனிதனால் நடக்க முடியாத ஒரு அவல நிலை இருந்தது. அவர்கள் தங்கள் வீடுகளிலிருந்து வெளியே செல்லும் போது ஒரு கையில் தடி கம்பை பிடித்துக்கொண்டு, மற்றொரு கையில் குச்சியால் அதனை தட்டிக் கொண்டே செல்ல வேண்டும். அவ்வோசை அடிமை வருவதற்குரிய ஒரு அறிகுறியாகும். வயல்களில் வேலை செய்யும் பொழுது அதன் அருகில் இலைகளையும், கிளைகளையும் வைத்து வைக்க வேண்டும். அவை அவர்கள் இருப்பதை காண்பிக்கும் அடையாளமாக இருக்கும். இவற்றை மீறினால்உயர் ஜாதியினரின் கோபத்திற்கு ஆளாகிவிடுவார்கள். அடிமைகளின் உற்பத்தி பொருட்களை விற்பனை செய்வதும், வாங்குவதும் கூட விசித்திரமாக இருக்கும். அவர்கள் விற்கும் பொருட்களை நடை பாதையில் வைத்து விட்டு, குறிப்பிட்ட தூரம் தள்ளி நிற்க வேண்டும். பாதைகளில்செல்வோருக்கு பொருட்கள் தேவை என்றால், தொலைவில் நின்று விலையை கூறுவார்கள். அவர்கள் பொருட்களை எடுத்து கொண்டு பணத்தை அருகில் வைத்து விட்டு செல்வார்கள். இவ்வாறு வாழ்வதே அடிமைகளின் வழக்கமாகியும் விட்டது.

**வரிகள் வசூலிப்பு :**

மக்கள் மீது அரசு விதித்திருந்த வரிகளை ஒவ்வொறு மாதமும் கட்ட வேண்டும். ஆனால் அரசின் அதிகாரிகள் மாதந்தோறும் வராமல் வருடத்திற்கு ஒரு முறை வந்து பணம் வசூலிப்பதை வழக்கமாக கொண்டிருந்தனர். அவ்விதம் வரும் போது மொத்த வரியையும் சேர்த்து கட்டும்படி கட்டாயப்படுத்தப்பட்டனர். இதனால் மக்கள் அநியாய வட்டிக்கு கடன் வாங்கி வரிகளை செலுத்திவந்தனர். வரி வசூலிக்கும் அதிகாரிகள் பல மடங்கு பணத்தை வாங்கிவிட்டு, குறைந்த தொகைக்கு ரசீது கொடுப்பது வழக்கம். இதனால் வாங்கிய கடனை கொடுக்க முடியாமல் மக்கள் நாள்தோறும் பாடுபட்டனர். மேலும் இவற்றிற்கு மாறாக செயல்பட்டவர்கள் அனேக துன்பங்களுக்கும் ஆளானார்கள். அவர்கள்தலையில் இரும்பு, உலக்கையால் அடித்து கொல்லும் வழக்கமும் இருந்தது. வரி கொடுக்க தவறியவர்கள் முதுகில் மிகப் பெரிய கல்லை ஏற்றி பல மணி நேரம் வெயிலில் நிற்க வைப்பார்கள். ஒரு வருடத்திற்கானவரியை கொடுக்காததால் தாமரைக்குளம் என்ற ஊரில் உள்ள ஊர் தலைவரின் காதில் பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பியை நுழைத்து 80 நிமிடங்கள் தொங்கவிட்டு துன்புறுத்தினர். வீட்டில் உள்ள பெண்களையும் அதிகாரிகள் விட்டுவைக்கவில்லை. அவர்களுடைய தலைமயிரை உலக்கையை சுற்றி கட்டி தொங்க விட்டனர். இது மட்டுமல்லாது, சாணி குழியில் இறக்கப்படுதல், மிளகாய் பொடி தூவி வெயிலில் நிற்க வைத்தல், புளியை உண்ணுவித்தல், மீசையை பிடுங்குதல், காதறுத்தல்



போன்ற கொடிய துன்பங்களுக்கும் மக்கள் ஆளாயினர். இவ்வாறு ஒடுக்கப்பட்ட மக்களின்வருமானத்தில் பெரும்பகுதி அரசாலும், உயர் அதிகாரிகளாலும் உறிஞ்சப்படுவதோடு, அவர்களின் கொடுமைகளையும் மக்கள் அனுபவித்து வந்தனர். தேவதாசிமுறை பெண்களின் நிலையை மேலும் இழிவாக்கியது. ஒடுக்கப்பட்ட இனத்துபெண்கள் அரை நிர்வாணமாக சுற்றி திரிந்து வாழ்ந்து வந்தனர். மொத்தத்தில் மக்கள் ஜாதி என்ற போர்வையில் உள்ளடக்கப்பட்டு, அரசின் அடக்குமுறைகளுக்கு அஞ்சி, அறியாமையில் மூழ்கிக் கிடந்தனர்.

கிறிஸ்தவம் பரவிய இடங்களில் எல்லாம் மக்கள் நாகரிகம் பெற்று அறியாமை இருள் அகன்று வாழ்ந்தனர். அந்நற்செய்தி திருவிதாங்கூர் மக்களையும் சந்தித்தது. அனேக ஊழியர்கள் வெளிநாடுகளிலிருந்துவந்து இம்மண்ணில் கால் பதித்தனர். ரிங்கல்தோபே, சார்லஸ் மீட், ஜேம்ஸ் ரஸ்ஸல் போன்ற மாமனிதர்களின் பணியின்மூலம்திருவிதாங்கூரில்மறுமலர்ச்சி ஏற்பட ஆரம்பித்தது. சுவிசேஷ பணியுடன், சமுதாய பணியும், கல்விப்பணியும் சேர்ந்து செய்யப்பட்டதால்இவ்வடிமைத்தனங்கள் விலக ஆரம்பித்தது. இதன் விளைவாக, கிராமங்கள்தோறும்ஆலயங்கள் எழும்பியது. ஆலயங்களுக்குச் சென்று தேவனை ஆராதித்து வந்ததின் நிமித்தம்மக்கள் நாகரிகம் பெற்றவர்களாகி கல்வியையும் கற்றார்கள். இதனால் சமுதாயத்தில் காணப்பட்ட மூட நம்பிக்கைகள் பல செயலிழந்தன. கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட மக்களின் எண்ணிக்கை அதிகரித்ததோடு அவர்களின் அடிமைத்தனமும் மாறியது. ஜாதி வேறுபாடின்றி மக்கள் கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ள ஆரம்பித்தனர். ரிங்கல்தோபேவை தொடர்ந்து பல மிஷனெரிகள் இப்பகுதிக்கு வந்தனர். ரிங்கல் தோபேயின் சிறப்பான பணி மக்களின் வாழ்வை மாற்றியது. ஒவ்வொரு ஆலயங்களுக்கும் பள்ளிக்கூடம் நிறுவப்பட வேண்டும் என்ற ரிங்கல் தோபேயின் தொலைநோக்கு பார்வைவெகு விரைவில் வியக்கத்தகு வளர்ச்சியை தென் திருவிதாங்கூரில் ஏற்படுத்திற்று .

மிஷனெரிகள் அனைவரும் ஒன்றிணைந்து சமூகத்தைஇழிவுபடுத்தும்அடிமைத்தனத்தை விலக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். இங்கு காணப்பட்ட அடிமைத்தனத்தை பற்றி நாளிதழ்களில் பிரசுரித்தனர். திருவிதாங்கூரில் அடிமை முறை என்ற நூலை ஆப்ஸ் ஐயர் வெளியிட்டார். 1843 இல் இந்திய அரசு, அடிமை முறையை ஒழிக்கும் சட்டத்தை நடைமுறைப்படுத்தியது. இச்சட்டம் திருவிதாங்கூர் அரசை கட்டுப்படுத்தவில்லை. ஆனால் இம் முயற்சியை மேற்கொள்ளும் மிஷனெரிகளுக்கு இச்சட்டம் பெரிய உந்துதலாகஅமைந்தது. அரசருக்குகடிதங்கள் எழுதிஅவற்றின் முக்கியத்துவத்தையும் வலியுறுத்தினார்கள். 1853 ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 15 ஆம் நாளுக்குப் பிறகு, அடிமைகளுக்குப் பிறக்கும்குழந்தைகள் சுதந்திரமானவர்கள் என்ற சட்டம் வெளியிடப்பட்டது. இதன் மூலம் பெற்றோரின் சம்மதமின்றி பிள்ளைகளை விற்பதுதடை செய்யப்பட்டதேயொழிய அடிமைத்தனம் அவர்களை விட்டு ஒழியவில்லை. சென்னை அரசு மற்றும் திருவிதாங்கூரின் ஆங்கில பிரதிநிதியின் தொடர் முயற்சியாக ஜூன் 24 ஆம் நாள் வரலாற்று சிறப்புமிக்க அடிமை ஒழிப்பு சட்டத்தை திருவிதாங்கூர் அரசர் வெளியிட்டார். அரசரின் உத்தரவால் ஏறக்குறைய 1,36,000 அடிமைகள் விடுதலை பெற்றார்கள். அடிமைகளின் விடுதலைக்காக மிஷனெரிகளும் ஆங்கில அரசும் மேற்கொண்ட முயற்சிகளின் பலனை மக்கள் பின்னாட்களில் கண்டார்கள். ஆண்டாண்டு காலமாக சமூகத்தில் நிலவிவந்த அடிமைத்தனம், இழிவு நிலை, சுயமரியாதை இழப்பு போன்றவை மிஷனெரிகளின் சேவையின் மூலம்ஒழிக்கப்பட்டது. அரை நிர்வாணமாய் சுற்றித்திரிந்த பெண்களின் மானத்தை மறைக்க, மிஷனெரிகள் ஆடைகளை அணிய கற்று கொடுத்தனர்.

சுவிசேஷம் அழகிய மனிதர்களை உருவாகும் என்பது எத்தனை உண்மை. இன்றும் பல்வேறு விதங்களில் மக்கள் அடிமைப்பட்டு உள்ளனர். அவர்களை விடுவிக்க நம்மில் யாருண்டு?

கர்த்தரே ஆவியானவர், கர்த்தருடைய ஆவி எங்கேயோ அங்கே விடுதலை உண்டு. 1 கொரிந்தியர் 3:17



# சமுதாய விடுதலையில் கிறிஸ்தவர்களின் பங்கு



அருள்திரு. ஜாண் சாமுவேல். H

இந்திய தேசத்தின் சுதந்தரத்திற்கு கிறிஸ்தவர்களின் பங்களிப்பு ஒன்றும் கிடையாது என்பது மதவாத மக்களின் கருத்தாகும். ஆனால் பல கிறிஸ்தவர்கள் இந்திய சுதந்தரத்தின் விடுதலைக்காகப் போராடி தங்களின் பங்களிப்பை மிக சிறப்பாக கொடுத்தார்கள். இந்திய மக்களின் சுதந்தரத்திற்கு மிஷனெரிகளின் பங்களிப்பு மிக முக்கியமானது. வெள்ளைக்காரர்களின் அடிமைத்தனத்தினின்று மக்கள் பெற்ற சுதந்தரத்தைக் காட்டிலும் ஆதிக்கமிக்க மக்கள் கூட்டத்திலிருந்து பாமரமக்கள் பெற்ற விடுதலைக்கு வித்திட்டவர்கள் மிஷனெரிகள் என்பதுதான்.

**கல்வியில் கண்ட விடுதலை:**

கிறிஸ்தவத்தை அறிவிக்க வந்தவர்கள் ஏன் தமிழ் மீது அத்தனை காதல் கொண்டிருக்க வேண்டும் என்பது பெரிய கேள்வியே. இறைவனை அறிவிக்க வந்தவர்கள் கிறிஸ்தவர்கள் தமிழுக்கு ஆற்றின தொண்டினை யாரும் மறைக்கவும் முடியாது, மறுக்கவும் முடியாது. தமிழருக்கும் ஐரோப்பியருக்கும் ஏற்பட்ட சமய, வாணிப மற்றும் அரசியல் தொடர்புகளால் தமிழில் சில மாறுதல்களும் முன்னேற்றங்களும் ஏற்பட்டன. மயிலை சீனி. வேங்கடசாமி என்பவர் எழுதிய ‘கிறிஸ்தவமும் தமிழும்‘ என்ற நூலில், தமிழ் மொழிக்கு ஏற்பட்ட மாறுதல் அல்லது வளர்ச்சி பெரும்பாலும் ஐரோப்பியப் பாதிரியார்களால் உண்டானவையே‘, என்று கூறியிருக்கிறார்.




**தமிழுக்கு புது உருவம் தந்தவர்கள் மிஷெனரிகள்:**

தமிழ் மொழியானது பாமரரும் புரிந்து கொள்ளவும், வாசிக்கவும் கூடாத மொழியாகவே பல நூற்றாண்டுகளாக இருந்தது என்று உரைநடை தோன்றிய வரலாற்றில் காண முடியும். தமிழில் இலக்கியம் மட்டும் கவிதைகளாக இருக்கவில்லை, மருத்துவம், சோதிடம், இலக்கணம், இறையியல், தத்துவம், அகராதி என அனைத்தும் கவிதைகளாகவே இருந்தது. உரைநடைகளை தமிழர்கள் ஒரு பொருட்டாக எண்ணியதில்லை என எம். சீனிவாச அய்யங்கார் கூறுகின்றார். பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் தென்னிந்தியாவில் சுற்றுப்பயணம் செய்த அபி டுபாய் என்ற கத்தோலிக்கத் துறவி ’தொன்றுதொட்டே இந்துக்களுக்குக் கவிதை மட்டுமே பழக்கமாக இருந்து வந்திருக்கிறது. கவிதை



மீது அவர்களுக்கு மதிப்பு அதிகம், வேறு எந்த எழுத்துவகை மரபும் இருப்பதாகத் தெரியவில்லை. அவர்களின் பழைய நூல்களில் ஒன்று கூட உரைநடையிலோ அல்லது மக்கள் பேசும் பாமர மொழியிலோ இல்லை. அவர்களுடைய மருத்துவ நூல்கள் கூட கவிதைகளாகத்தான் இருக்கின்றன. இப்படி பாமரருக்குப் புரியாத மொழியில் எழுதிவருவது அந்தணரின் யுக்தியாகத் தெரிகிறது. அறிவு துறைகளில் பிற சாதியினர் புகாதிருக்கவும், அவற்றைத் தாங்கள் ஏகபோகமாக அனுபவிக்கவும், அவர்கள் கையாண்டுவருகிற பழக்கமாக இருக்கிறது’ என்கிறார். இந்நிலையை மாற்றியவர்கள் கிறிஸ்தவர்கள். கத்தோலிக்க சமயத் தொண்டர்கள் பதினாறாம் நூற்றாண்டின் நடுவில் தமிழகம் வந்து சேர்ந்தபோது அவர்கள் தங்கள் சமய நூல்களை உரைநடையிலேயே எழுத தொடங்கினார்கள். நவீன உரைநடைக்கு நடைபாதை அமைத்தவர்கள் கிறிஸ்தவர்களே.

**பாமரருக்கு தமிழ் தந்தவர்கள் மிஷெனரிகள்:**

இந்துமதத்தின் மனுதர்ம சாத்திரத்தின்படியாக பிரம்மனின் தலையிலிருந்து பிறந்த மேல்சாதியினர் மட்டுமே கல்வி கற்க வேண்டும், மற்றவர்கள் கல்வி கற்பது பெரும் பாவமாகவே கருதப்பட்டது. பிராமணர்கள் வேதத்தை படிக்கும்போது

கீழ்சாதியினர் ஒருவர் அதனைக் கேட்டுவிடுவாரானால் அவரது காதுகளில் காய்ச்சிய ஈயத்தை ஊற்றி அவரை கொடுமைப்படுத்தியிருக்கின்றார்கள். அப்படியாக மக்களுக்கு தூரமாக இருந்த படிப்பை எல்லா வீட்டின் படிக்கட்டுகளுக்கே கொண்டு சேர்த்தவர்கள் மிஷனெரிகள்.

அக்காலங்களில் பேசப்பட்ட தமிழுக்கும் எழுதப்பட்ட தமிழுக்கும் சற்றும் சம்பந்தம் இல்லாதிருந்தது. இந்நிலையை மாற்றியவர்கள் கிறிஸ்தவர்கள். நவீன உரைநடைக்கு நடைபாதை அமைத்தவர்கள் கிறிஸ்தவர்களே. அவர்களுள் ஒருவர் தூத்துக்குடி மாவட்டத்தில் அமைந்துள்ள புன்னக்காயல் பகுதியில் ஊழியம் செய்த அன்டிரீக்ஸ் என்பவர் ஆவார். அன்டிரீக்ஸ் என்பவர் தமிழுக்கு பெரும் தொண்டாற்றிய கிறிஸ்தவர் ஆவார். 1520ல் போர்ச்சுகல்லில் யூதப் பெற்றோருக்குப் பிறந்தவர் இவர். 1546ல் மிஷனெரியாக தென் இந்தியா வந்தார். பிரான்ஸ்சிஸ் சேவியர் தமிழ் நாட்டை விட்டு போனபின்பு அப்பகுதிகளின் பொறுப்பு அன்டிரீக்ஸ்சிடம் வந்தது. இவர் நம்முடைய ஊரின் மிக அருகான புன்னக்காயல், தூத்துக்குடி, மணப்பாடு போன்ற இடங்களில் பணியாற்றியவர். தமிழ் கற்று, கல்வியறிவு அதிகம் இல்லாத இவர்களுக்கு தங்களுக்குப் பழக்கமான மொழியில் சமய நூல்கள் எழுதி அவற்றை அச்சிட்டுக் கொடுத்தார். மூன்று நூல்களை இவர் மொழிப்பெயர்த்துள்ளார். ‘தம்பிரான் வணக்கம்‘, கிரீசித்தியானி வணக்கம்‘ மற்றும் ‘ஃபிளாஸ் சான்க்டோரம்‘ என்பவைகளே. இந்நூல் 1586ம் ஆண்டு புன்னக்காயலில் அச்சாகி இருக்கிறது. 1954ல் தான் இது வத்திக்கான் நூலகத்தில் கண்டுபிடிக்கப்பட்டு 1967ல் மறுபதிப்பு செய்திருக்கிறார்கள். தலைப்பு இல்லாததால் ‘அடியார் வரலாறு என்று பெயர் சூட்டப்பட்டது. இவரது தமிழ்நடை எளிமையானது, சரளமானது. அவர் வாழ்ந்த பகுதியின் மக்கள் பேசியும் எழுதியும் வந்த மொழியை அடிப்படையாகக் கொண்டு தம்முடைய நூலை இவர் மொழிபெயர்த்துள்ளார். இதற்கு முன்னர் இப்படி மக்கள் பேசும் மொழியில் இலக்கியங்கள் உருவாகவில்லை என்பது உண்மை . பாமரரும் தமிழின் புகழை உணர செய்தவர்கள் கிறிஸ்தவர்கள் என்பது புலனாகிறது. இவரைத் தொடர்ந்து திருநெல்வேலி மிஷன் பகுதிகளுக்கு வந்த மகாகனம். கால்டுவெல் பேராயர், டாக்டர் போப் அவர்கள் இன்னும் பலர் தமிழ் மொழிக்கு ஆதிக்க மக்களிடமிருந்து மாபெரும் விடுதலையை பெற்று கொடுத்தனர்.



**பெண்ணடிமைக்கு முடிவு கட்டியவர்கள் மிஷனெரிகள்:**

இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னர் தமிழகத்தின் பகுதியில் வாழ்ந்த அநேக பெண்கள் தங்கள் மார்பகங்களை மறைப்பதற்கு அனுமதி கிடையாது. கேரளாவிலே வாழ்ந்த நாயர்கள் மற்ற மக்களை ஆட்சி செய்து இவ்வாறு கொடுமைப்படுத்தினார்கள். 1822ம் ஆண்டு தற்சமயம் கன்னியாகுமரி எல்கைக்குட்பட்ட கல்குளம் என்ற கிராமத்தில் ஒரு கலகம் வெடித்தது. ஒரு சில நாயர்கள் சேர்ந்து கிறிஸ்தவநாடார் பெண்களை மேலாடை அணிந்ததற்காக தாக்கினார்கள். அச்சமயம் அப்பகுதியில் ஊழியம் செய்த மிஷனெரிகள் நீதிமன்றத்தை அணுகி கிறிஸ்தவ நாடார்கள் மார்புகளை மறைத்துக் கொள்ளலாம் அவர்களுக்கு அதிகாரம் உண்டு என்று நல்ல தீர்ப்பினைப் பெற்று கொடுத்தனர். ஆனாலும் கிறிஸ்தவ நாடார் பெண்கள் நாயர் பெண்களைப் போன்று ரவிக்கை அணிய கூடாது. இரண்டு ஆண்டுகள் கழித்து கிறிஸ்தவ நாடார் பெண்கள் நாயர் பெண்களைப் போன்று ரவிக்கை அணிய ஆரம்பித்தார்கள். அணிய ஆரம்பித்ததும் பிரச்சனை இன்னும் வலுப்பெற்றது. நாயர்கள் அநேக ஆலயங்களையும், பள்ளிக்கூடங்களையும் தீக்கிரையாக்கினார்கள். அச்சமயம் மெட்ராஸ் பிரஸிடென்ஷியின் கவர்னர் அவர்கள் மிஷனெரிகளின் வேண்டுகோளுக்கிணங்க கிறிஸ்தவ நாடார் பெண்கள் தங்கள் விருப்பத்திற்கேற்ப எப்படி வேண்டுமென்றாலும் ரவிக்கை அணிந்துக் கொள்ளலாம் என்ற ஆணையை பிறப்பித்தார். அநேக புறமதஸ்தர்கள் மிஷனெரிகளின் அயராத உழைப்பையும், பெண்களின் மானத்தைக் காப்பதற்கு எடுக்கும் முயற்சிகளையும் கண்டு கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ள ஆரம்பித்தார்கள். அடிமைத்தன வாழ்விற்கு முற்றுபுள்ளி வைத்து விடுதலையின் வாழ்வை சமுதாயத்தில் பெற்று கொடுத்தார்கள்.

**சுதந்தரப் போராட்டத்தில் கிறிஸ்தவர்கள்:**

இந்திய தேசத்தின் விடுதலைக்காக போராடின கிறிஸ்தவர்களின் பெயர்களை அநேகர் அறிந்திருக்கமாட்டார்கள். எதிர்தரப்பினர் இந்தக் கேள்விகளை நம்மிடம் கேட்டால் பெரிய யோசனையே நம் உள்ளத்தில் மேலிடுமே தவிர பதில் வராது. ஆனால் பல கிறிஸ்தவர்கள் தங்கள் வாழ்வை இந்திய தேசத்தின் விடுதலைக்காகக் கொடுத்திருக்கிறார்கள். சிலமிஷனெரிமார்கள்கூடஇந்தியதேசத்தின் விடுதலைக்காகப் பாடுபட்டிருக்கிறார்கள். ஸ்டான்லி ஜோன்ஸ் (Stanley Jones), C.F அன்ட்ரூஸ் (C.F.Andrews), J.C வின்ஸ்லோ (J.C.Winslow), வாரியர் எல்வின் (Varrier Elwin), ரால்ஃ ரிச்சர்ட் கேதான்(Ralph Richard Keithahn, எர்னஸ்ட் பார்ஸ்டர் பேட்டன் (Ernest Forrester-Paton) போன்றோர்கள் இப்பட்டியலில் அடங்குவார்கள். ஒரு சில மிஷனெரிகள் இந்திய தேசத்தின் விடுதலைக்காக தேசத்தையே விட்டு சென்றிருக்கின்றனர். இந்திய தேசிய காங்கிரசின் மிக முக்கியமான பொறுப்புகளில் பல கிறிஸ்தவர்கள்

பங்காற்றியிருக்கின்றனர். பல அமர்வுகளில் கிறிஸ்தவர்களின் பங்களிப்பு முக்கியமான ஒன்றாகவே இருந்தது. இந்திய தேசிய காங்கிரசின் வரலாற்று பக்கங்களைப் புரட்டிப்பார்த்தால் கிறிஸ்தவர்களின் பங்களிப்பு நன்கு புலப்படுகிறது. உதாரணமாக 1887ம் ஆண்டு நடைபெற்ற கூட்டத்தில் 607 பேர் பங்கு பெற்றார்கள். இவர்களில் 15 பேர் கிறிஸ்தவர்கள் என்பது பெருமைப்படக் கூடிய தகவல். அதோடு கூட நிறுத்திவிடவில்லை, பற்பல போராட்டங்களிலும் , இயக்கங்களிலும் இந்திய தேசத்தின் விடுதலைக்காக கிறிஸ்தவர்களின் பங்கிளிப்பு இருந்துள்ளது. சுராஜ் இயக்கம் (1905), ஒத்துழையாமை இயக்கம் (1920), சட்ட மறுப்பு இயக்கம் (1930), வெள்ளையனே வெளியேறு இயக்கம் (1942), போன்ற இயக்கங்களில் பங்குவகித்து கிறிஸ்தவர்களின் விடுதலைக்காக போராடினார்கள். 1973ம் ஆண்டு தமிழக அரசு விடுதலைப் போராட்டத்தில் பங்குபெற்ற தமிழர்களின் வாழ்க்கை அடங்கிய புத்தகம் ஒன்றினை வெளியிட்டார்கள் (Who is who of Freedom Fighters, Tamil Nadu) அந்த பெயர்களில் 103 பெயர்கள் கிறிஸ்தவர்கள் என்பதனை டாக்டர். ஆர்தர் ஜெயக்குமார் என்ற வரலாற்று ஆசிரியர் கண்டறிந்து கிறிஸ்தவ உலகிற்கு அறிமுகப்படுத்தியுள்ளார். இந்திய நாட்டின் பற்பல அடிமைத்தனங்களின்று இத்தேசத்திற்கு விடுதலையைப் பெற்று கொடுத்த பெருமை மிஷனெரிகளுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் சாரும் என்பது அப்பட்டமான உண்மை. என்னதான் கிறிஸ்தவர்களையும், கிறிஸ்தவத்தையும் ஓரங்கட்ட நினைத்தாலும், வரலாற்றின் பக்கங்களில் சாட்சிபகர்ந்து கொண்டிருக்கும் மிஷனெரிகளின் சாட்சியுள்ள வாழ்வை ஒரு போதும் புறம் தள்ளிவிட முடியாது.

கிறிஸ்தவ **வரலாற்று சுவடுகள்**

# சின்னத்தின் விளக்கம்:



அருள்திரு லாசரஸ் செல்வநாதன்,
வேலூர் காட்பாடி






Ἰησοῦς = Jesus  Χριστός = Christ  Θεός = God
Υἱός = Son  Σωτήρ = Savior

| GREEK TO ENGLISH | I | X | Θ | Υ | Σ | TRANSLITERATION |
|---|---|---|---|---|---|---|
| | i | ch | th | u | s | |

"Jesus Christ, God's Son, Savior"

சிலுவை தூயதென்பதற்கு இரு கருப்புக் கோடுகளுக்கு நடுவில் வெண்சிலுவை சிறப்பாகும். இருகருங்கோடுகள் மரச்சிலுவையாகும். சிலுவையினைக் கட்டிப் பிடித்து அணைத்திருப்பது மீன். மீனின் கிரேக்கச்சொல் IXDUS. கலிலேயர்க்கு மிகவும் விருப்பம் (தொழிலும், உணவும்). ஆதிகிறிஸ்தவர்கள் அரசுக்கும், யூதர்க்கும் பயந்து, தங்களை கிறிஸ்தவர்களென கூற அஞ்சி, இரகசிய விசுவாசிகளாய் வாழ்ந்த போது, தங்கள் வீடுகளில் சிலுவை குறியிட பயந்து, மீன்குறியை கதவிலிட்டு (பிற கிறிஸ்தவர்களுக்கு விளங்குமாறு) வாழ்ந்தனர். இதன் கிரேக்க எழுத்துகளை, தங்களுக்குள் கீழ்கண்டவாறு விளங்கி மகிழ்ந்தனர். (I) என்பதற்கு "இயேசு", (X) என்பதற்கு "கிறிஸ்து" (D) "தியாஸ்" (கடவுள்) என்றும், (U) "உயாஸ்" (குமாரன்) என்றும், (S) என்பது 'சோக்கா' (இரட்சிக்கிறது) எனும் கிரேக்க பதங்களை இஃதுஸ் (IXDUS) என்று வழக்கிலிருந்த மீன் படத்தை, கதவில் காட்டி, பயந்து வாழ்ந்தனர். இது கிரேக்க அரசுக்கும், யூத சபை தலைவர்களுக்கும் மறைவானதே!

# இடையன்குடி ஆலயத்திலுள்ள ஜாய் பெல்

 சு. ஜெபர்சன் ராஜசேகர்

இடையன்குடி, தூய திரித்துவ ஆலயத்தின் முன் பகுதயில் உயர்ந்த கோபுரம் உள்ளது. இந்த கோபுரத்திற்கு செல்லும் படிகட்டுகள் கலையழகுடன் சிறப்பாக வடிவமைக்கப்பட்டுள்ளன. இக்கோபுரத்தில் உள்ள நான்கு மணிகளை இங்கிலாந்திலிருந்து கால்டுவெல்லின் சகோதரர் ஜேம்ஸ் கால்டுவெல் அனுப்பிக் கொடுத்தள்ளார். இந்தியாவில் இடையன்குடி ஆலயத்தில் மட்டுமே இந்த வகை மணிகள் உள்ளன. இந்த மணிகள் 1876 ஆம் ஆண்டு செய்யப்பட்டனவாக அம்மணிகளில் பொறிக்கப்பட்டுள்ளது. இம்மணிகளை ஆலயத்தின் மணிக் கோபுரத்தில் ஏற்றுவதற்காக சாய்வான மணல் மேடை அமைக்கப்பட்டு, மேலே கொண்டு வைக்கப்பட்டது. இந்த மணிகள் ( ச, ரி, க, ம ) என்னும் சுரங்களை ஒலியாக எழுப்பும் தன்மை வாய்ந்தனவாகும். (ஆங்கில ராகங்களான Treble, Alto, Tenor, Bass) இந்த மணிகள் ஜாய் பெல்ஸ் (Joy Bells) என அழைக்கபடுகின்றன. இவற்றை மனிகூண்டில் இருந்தவாறே இசை பயின்ற நான்கு இளைஞர்கள் மணியின் நாக்கை மணியில் அடித்து, ஆங்கில இசைக்குறிப்புகளுக்கு ஏற்ப இசைப்பர்.



இன்னும் இம்மணிகளை அவ்வூரிளுள்ளோர் வழி வழியாக ஆங்கில இசைக் குறிப்புகளின்படி இசைத்து வருகின்றனர். இது இடையன்குடி மக்களுக்கு மிகவும் பெருமையான ஒரு பாரம்பரியமாகும்.

அந்தந்த விசேஷ பண்டிகை காலங்களுக்குஏற்பராகம்மாறாமல்பாமாலை, கீர்த்தனைப் பாடல்கள் இசைக்கப்படுகின்றன. பண்டிகை காலங்களிலும், திருமண ஆராதனை நேரங்களிலும் (சரழி) என்னும் இசை இசைக்கப்படும். இது மிகவும் புகழ் பெற்ற இசையாகும். இந்த மணிகளின் ஓசையினை சுமார் ஐந்து கி.மீ வரையிலும் கேட்க முடியும். உலகத்தில் இவ்வகையிலான மணிகள் இரண்டே இடங்களில் உள்ளதாக கூறப்படுகின்றது. ஒன்று இலண்டன் மாநகரிலுள்ள வெஸ்ட்மின்ஸ்டர் அபே ( Westminster Abbey) என்னும் தேவாலயத்தில் உள்ள ஏழு மணிகள்; இரண்டாவதாக இடையன்குடி தேவாலயத்தில் உள்ள நான்கு மணிகள். இந்த மணிகள் உருவாக்கப்பட்டு 144 ஆண்டுகள் கழிந்த பின்னரும் அதன் ஒலியில் எவ்வித மாற்றமும் இல்லாமல் காணப்படுவது பெருமைக்குரிய ஒன்றாகும்.

## படைப்புகளை அனுப்புவோர் கவனத்திற்கு...

1.படைப்புகளை அனுப்புவோர் நகல் எடுத்துக் வைத்துக்கொண்டு அனுப்புவும்.

2.படைப்புகளை மின்னஞ்சல் மூலமாக அனுப்புவது மட்டுமே அனுப்ப வேண்டும். பிரசுர விபரம் 60 நாட்களில் தெரிவிக்கப்படும்.

3.மொழிபெயர்ப்புகளை அனுப்புவோர் மூலத்தின் ஒளிநகலையும் இணைக்க வேண்டும்.

4.மின்னஞ்சலில் படைப்புகளை அனுப்புவோர் பிரதி மாதம் 15ம் தேதிக்குள் அனுப்ப அன்புடன் கேட்டுக்கொள்கிற்றோம்.

5.படைப்புகளை அனுப்புவோர் முழு முகவரியும் உங்களுடைய முழு பெயர், மின்னஞ்சல் முகவரி, புகைப்படம், தொலைபேசி எண் மறக்காமல் குறிப்பிட வேண்டும்.

மின்னஞ்சல்: christianhistorical@gmail.com

தொலைபேசி: +91 9176780001



# இம்மைக்கும் மறுமைக்குமே நற்செய்தி



அருள்திரு லாசரஸ் செல்வநாதன்
வேலூர் காட்பாடி

இன்றைய வேலூர் பேராயம் 1853ல் அமெரிக்கன் ஆற்காடு மிஷனால் தொடங்கப்பட்டது. வேலூரிலிருந்து 40 கி.மீ. ஆரணி. இங்கு மிஷனரிகள் தங்கி பள்ளி, விடுதி, சபை நடத்தினர். ஆரணியிலிருந்து 40 கி.மீ. ல் "காத்தாம்பாடி" எனும் கிராமத்தில் 1853லேயே சபை தொடங்கினர். இக்கிராமம் பணக்கார ரெட்டியார்களின் வியாபார மண்டியாகும். இங்கு வாழ்ந்த ஏழை கிறிஸ்தவர்களை சாராயம் குடிக்க பணம் கொடுத்து அவர்களின் நிலங்களை அபகரித்து, தங்களின் கூலியாட்களாக அடிமையாக்கி கொடுமைபடுத்தியதை, ஆரணி வந்து மிஷனரிகள் 1. ஜோசப் மேயோ 2. ஃபேரர் 3. வில்லியம் - ஆகியோரிடம் முறையிட்டதும் அன்றே குதிரை மீது சென்று 1861ல் ரெட்டிகளுக்கு பணம் திரும்ப கொடுத்து நிலங்களை மீட்டுத்தந்தனர். பெரிய ஏரியையும் கட்டித் தந்தனர். பின் விரும்பிய கிற்ஸ்தவர்களை 10 கி.மீ. தூரத்தில் இரு கிராமங்களை உருவாக்கி பள்ளி, ஆலயம், வீடுகள், நிலம், ஏரி அமைத்துக் குடியேற்றினர். அவற்றுள் 1. அருள்நாடு, 2. ஞானோதயம் கிராமங்களில் இன்றுவரை கிறிஸ்தவர்கள் மட்டுமே மகிழ்ந்து, ஒன்றுபட்டு, நல்வளத்துடன் வாழ்கின்றனர். பலர் கல்லூரி பேராசிரியர்கள், மருத்துவத்துறைத் தலைவர்கள், பலர் மேலை நாடுகளுக்குச் சென்று செல்வந்தர்களாகி சாத்தாம்பாடியில் ரெட்டியார்களிடமிருந்த அவர்களின் நிலங்களையும் வாங்கி வாழ்கின்றனர். கல்வி, மருத்துவம், தொழில் பயிற்சி, விவசாயம், இறையியல் பள்ளி ஆகியவற்றில் வளர்ந்த பேராயமிது. மறுமைக்கே சுவிசேஷமன்று, இம்மைக்கும் என அக்காலத்து மிஷனரிகள் பணியாற்றினர்.

---

# புத்தக அறிமுகம்




TDTA திருநெல்வேலி திருமண்டல
புத்தக நிலையத்திலும் கிடைக்கும்.

அருள்திரு. இலாசரஸ் செல்வநாதன் தமிழார்வமும், இசைப் புலமையும், இறையியல் தெளிவும் மிக்க. ஓய்வு பெற்ற ஆயர். கிறிஸ்துவின் பாடுகள் குறித்து 1. ஈரைம்பது ஈடேற்ற கீர்த்தனைகள், 2.தெரிந்த கீர்த்தனைக் கொண்டு வழக்கிழந்துவரும் கீர்த்தனைகளைப் பாட உதவும் நீங்களே பாடலாம், 3. ஆழ்ந்து கிடக்கும் இறையியல் நுட்பங்களையும், பக்தி உணர்வையும், இலக்கிய நயத்தையும், இசைக் கூறுகளையும், வெளிப்படுத்தும் இலக்கியப் புதையல், 4. கிறிஸ்து குல கீர்த்தனைகள், 5. ஓய்வுக்குப்பின்னும் ஊழியம் (கைநூல்), 6 . தினமும் உணர்ந்து பாடி, தியானிக்க தினதியானக் கீர்த்தனைகள் எனும் இந்நூலும் படைத்தவர். சபைப் பாகுபாடின்றித் தமிழகத்திலும் ஆந்திர, கர்நாடகவிலும் கீர்த்தனைகளின் புகழைப் பரப்பி வருபவர் பல நாடுகளுக்குச் சென்று கிறிஸ்தவ தமிழ் மாநாடுகளில் ஆய்வுக் கட்டுரைகள் வழங்கி இறையிசையினை சொற்பொழிவு ஆற்றியும், காலக்ஷேபம் செய்து இறைப்பணியாற்றி வருகிறார். கீர்த்தனை சீர்பரவுவார், கீர்த்தனை புரவலர், கீர்த்தனை செம்மல் எச்.ஏ. கிருஷ்ணபிள்ளை, வீரமாமுனிவர் விருது என 11 விருதுகளையும் பெற்றுள்ளார். சென்னைப் பல்கலைக்கழகத்தில் கீர்த்தனைகளும் இறையியலும் எனும் தலைப்பில் சொற்பொழிவுகளை நிகழ்த்தி, சென்னைப் பேராயத்தில் கீர்த்தனை முன்னேற்றப் பணி அலுவலராக பணியாற்றியவர். ஒருவரின் சிந்தனைகளையே ஓராண்டு படித்தால் நூலைப் படைத்தவரின் சிந்தனையே படிப்பவர்க்கு வந்துவிடும் ஆதலால், புலவர்களின் சிந்தனைகளை பாடி உணர்ந்து தியானிக்க உம்மிடமுள்ள இந்நூல் உதவிடும்.

**கிடைக்குமிடம்** அருள்திரு.இலாசரஸ் செல்வநாதன்
33,ஆயர் வீதி,ஆசிரியர் காலனி,
காட்பாடி, வேலூர் -632007,9442078744

## ஜூலை மாதம் பிறந்த நாள் கொண்டாடும் மிசனரிகள், பாடலாசிரியர்கள்,குருவானவர்கள்

Abraham Pandithar
Tyagaraj Christian Joseph
Thangiah Asirvatham Aralanandam
John Davies Thomas
Devasagayam Swaminadian
Thomas Adamson
Yesudian Kolpillai
Breed Frank William
Evans William Eiward
William Tobias Ringeltaube
M S Yesudasan
Adoniram Judson
Devapiriam Gnanapragasam David
Samuel Sandoshnm Chellaswami
Harnett Ellison Jennings
Thomas Arthur Heber

Paranjothi Samuel Swaminadan
Mathuranayagam Gnanamuthu
Vedanayagam Samuel Azariah
William Carey
Savarinayagam Gnanpragasam
Gnaniah Abrham David
Vedanayagam Yesudian
Isaac Samuel
Pakkianathan Moses Manuel
Richard Lea Allutt
Issac Samuel Senapathi
Manikkam Gnanakkan
Ponnuswami Issac Navanithan Samuel
Mother Teresa
Savarirayan Yesudasan
Jeyapaul David.S

## ஜூலை மாதம் நினைவு நாளை ஆசரிக்கும் மிசனரிகள், பாடலாசிரியர்கள்,குருவானவர்கள்

SimeonVedanayagam
DanielSimeon Anandam
SimonAaron Vetharatnam Robert
John Francis Spencer
Nallathabi Manuel
DesigachariJoseph
John Murdoch (Literary Evangelist)
MosesSandosham Solomon
TyagarajChristian Joseph
Aaron Vedamuthu
DurairajDavid Perinbam
Royappan Perianayagam
LazarusSumuel Devadasan
Bakkianadan Robert Wye
DevapiriamSuviseshmuthu David
Henry Constantine Huxtable
Arulanandan John
JesudasonR Gnanakkan
William Booth

AsirvathamJohn Jesudoss
JivanandamMoses
John Thomas James
Thomas Walker
Nallathambi Asivvathum
ArputharajIssace Daniel Thangathurai
David Chellappa
YesudianSither Gnanakkan
Muthusami Devaprasdam
Jesudasan Joseph
SwamidasanRobert
DavidAsrivadam
David Stephen
JoelPakkianathan
CaldwellRobert
Mrs Anna Walton George Walton
V. Gandhi Selwyn
Abraham Pandithar

# பரப்பாடி கிராமத்திற்கு விடுதலை

ஜான் ஞானராஜ்

திருநெல்வேலியிலிருந்து திசையன்விளை உவரி செல்லும் பாதையில் உள்ள ஒரு வீரம் மிகுந்த கிராமம் பரப்பாடி. பரப்பாடி கிராமத்தில் கிறிஸ்து மார்க்கம் பரவியது குறித்து மகாகனம் சார்ஜென்ட் அத்தியட்சர் அவர்கள் தாம் மிஷனரியாக பணி செய்த காலத்தில் அறிந்துகொண்ட குறிப்புகளை அறிக்கையாக CMS மேலிடத்துக்கு அனுப்ப அது CMR எனும் மிஷன் ரெக்கார்டுகளில் அறிக்கையாக பதிவிடப்பட்டது. அதன்மூலம் இக்கிராமத்தின் தொடக்க கால வரலாற்றை நாம் அறிந்து கொள்ள முடிகிறது. அதில் குறிப்பிடப்படும் செய்தி பின்வருமாறு

1849 இல் டோனாவூர் வட்டார தலைமை மிஷனரியாக Rev.C.T.E. ரேனியஸ் ஐயரவர்களின் மகன் Rev. சார்லஸ் ரேனியஸ் ஐயரவர்கள் பணி செய்து வந்த காலம் அது.

தந்தையைப் போன்று குதிரை மீதேறி அமர்ந்து குதிரையின் துணையுடன் வடக்கே அம்பாசமுத்திரம் கல்லிடைக்குறிச்சி முதல் தெற்கே பணகுடி பேர்ப்பிலான்குளம் வரை பரந்து விரிந்திருந்த டோனாவூர் வட்டார கிராமங்கள் அனைத்திலும் சிறப்பாக நற்செய்தி அறிவித்தவர் அவர் அவரது தந்தை நெல்லை அப்போஸ்தலர் Rev ரேனியஸ் ஐயரவர்கள் காலத்தில் உருவாகி நலிந்து போன அனேக திருச்சபைகளை புதுப்பித்தவர் அவர்.

தந்தை Rev.C.T.E.ரேனியஸ் ஐயரவர்கள் காலத்தில் உருவாக்கப்பட்டு நலிந்துபோன நிலையிலிருந்த கல்லிடைக்குறிச்சி திருச்சபையை புதுப்பித்தவரும் அவரே.

டோனாவூரிலிருந்து சுவிசேஷபுரத்திற்கு அங்குள்ள மிஷினரி Rev. சார்ஜென்ட் ஐயர் அவர்களை சந்திப்பதற்காக குதிரையில் இவர் பயணம் செய்து வந்த போது பரப்பாடியில் நடைபெற்ற ஒரு சம்பவம் பரப்பாடி கிராமம் கிறிஸ்து மார்க்கத்தை ஏற்றுக் கொள்வதற்கு மூல காரணமாக அமைந்தது.

**பண்ணையாருக்கு புத்தி சொன்ன Rev.சார்லஸ் ரேனியஸ்**

அந்த காலகட்டத்தில் 1849 இல் பரப்பாடி கிராமம் பண்ணையார் ஒருவரின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தது. அந்த பண்ணையார் தமது அடியாட்களின் துணைகொண்டு பரப்பாடி கிராம மக்களை கொடூரமாக வேலை வாங்கி வந்தார்.

பரப்பாடியில் குளம் வெட்ட தீர்மானித்த பண்ணையார் பரப்பாடி பொதுமக்களை குளம் வெட்டும் பணியில் ஈடுபடுத்தி பணிகளை வேகமாக செய்யச் சொல்லி தனது அடியாட்களை கொண்டு சவுக்கால் அடித்து கொடுமைப்படுத்தி வந்தார் தமது அடியாட்கள் பரப்பாடி பொதுமக்களை சவுக்கால் அடித்து கொடுமைப்படுத்தி வேலை வாங்குவதை தூரத்தில் இருந்த ஒரு மர நிழலில் அமர்ந்திருந்த வாரு பண்ணையார் கண்காணித்து வந்தார். அதன் அருகில் சாலை ஒன்று காணப்பட்டது. அந்த சாலை வழியாக டோனாவூர் மிஷனரி Rev.சார்லஸ் ரேனியஸ் ஐயரவர்கள் குதிரையில் சென்று கொண்டிருந்தார் பொதுமக்களை அடியாட்கள் துணைகொண்டு பண்ணையார் சவுக்கால் அடிப்பதை தூரத்தில் இருந்து கண்ட யூஎஸ.சார்லஸ் ரேனியஸ் ஐயரவர்கள் மிகுந்த கோபம் கொண்டார் கோபாவேசத்துடன் தமது குதிரையிலிருந்து இறங்கி வேகமாக சென்று அடியாள் ஒருவரிடமிருந்து சவுக்கை பறித்துக்கொண்டு மரநிழலில் அமர்ந்து கொண்டு தனது ஆட்கள் சவுக்கால் அடிப்பதை கண்காணித்துக் கொண்டிருந்த பண்ணையாரிடம் ஓடிச்சென்று அந்த சவுக்கால் பண்ணையாரை அடித்து தண்டித்து கண்டித்து பொதுமக்களை மனிதராய் மதித்து நடத்துங்கள் இப்படி சவுக்கால் அடித்து துன்பப்படுத்துகிறீர்களே என புத்தி சொல்லி தமது வழியே கடந்து சென்றார் இதை கண்டு அதிர்ச்சியடைந்த பண்ணையார் நிலைகுலைந்து போனார் இந்த காட்சியை பரப்பாடியிலுள்ள பொதுமக்கள் நேரில் இந்த காட்சியைக் கண்டார்கள்.

**சபை உருவான வரலாறு**

தங்களுடைய நலனுக்காக ஒரு ஐரோப்பிய மிஷனரி செயல்பட்டதை அவர்கள் உற்றுநோக்கி கவனித்தார்கள்.

ஐரோப்பிய மிஷினரி குறித்து விசாரித்தார்கள் அவர் இயேசு கிறிஸ்துவை அறிவிக்கும் நற்செய்தி ஊழியர் என்பதைக் கண்டு கொண்டார்கள் தாங்களும் இயேசு கிறிஸ்து குறித்து நற்செய்தியை அறிந்துகொள்ள வேண்டும் என்று விரும்பினார்கள் அந்த ஐரோப்பிய மிஷனரி சுவிசேஷபுரத்திற்கு செல்கிறார் என்பதையும் அவர் டோனாவூரில் தங்கியிருந்து பணி செய்கிறார் என்பதையும் அறிந்து கொண்ட அவர்கள் சுவிசேஷபுரம் சென்றும், டோனாவூர் சென்றும், கிறிஸ்து மார்க்க சத்தியத்தை அறிந்து கொண்டார்கள்.

இரண்டு ஆண்டுகளுக்குள் கிறிஸ்தவர் ஆனார்கள் 1851 இல் பரப்பாடி CMS கிறிஸ்தவ சபை உருவாகிவிட்டது இதனை பிற்காலத்தில் பேராயர் ஆன Rev.சார்ஜன்ட் ஐயரவர்கள் குறிப்புகளாக குறிப்பிட்டுள்ளார்கள்.

சபை வளர்ச்சியில் திரு. முத்தையா நாடார் அவர்களின் பங்களிப்பு

இந்த காலகட்டத்தில் பரப்பாடி கிராமத்தில் திரு. முத்தையா நாடார் என்பவர் கிறிஸ்தவராக மாறி மிகுந்த கிறிஸ்து மார்க்க வைராக்கியம் கொண்டவராக காணப்பட்டார் என்றும்

அவர் தமது முன்னோர்கள் வணங்கி வந்த அம்மன் கோவிலை இடித்து தள்ளி கிறிஸ்து மார்க்கம் பரப்பாடியில் வளர்வதற்கு பெரும் முயற்சிகளை செய்தார் என்றும் பரப்பாடி பாரம்பரிய செவிவழிச் செய்திகள் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. நாஞ்சான்குளம், மருதகுளம் போன்ற கிராமங்களை சார்ஜெண்ட் ஐயரவர்கள் நேசித்தது போல் பரப்பாடி கிராமத்தையும் நேசித்து செயல்பட்டு உள்ளதை அறிந்து கொள்ள முடிகிறது.

**தேவாலய வரலாறு**

பரப்பாடி கிராமத்தில் முதல் தேவாலயம் 10.12.1888 இல் நெல்லை பேராயராக பணிசெய்த மகாகனம் சார்ஜெண்ட் அவர்கள் மூலமாக தேவாலயம் என்ற பெயரில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. முதல் தேவாலயம் பரப்பாடி சபை மக்களுக்கு ஆண்டவரை தொழுது கொள்ள போதுமானதாக இல்லாததால் பெரிதான ஒரு தேவாலயம் கட்டப்பட்டது இந்த இரண்டாம் தேவாலயம் 18.10.1919 அன்று நெல்லை பேராயர் மகாகனம் உவாலர் அவர்களால் தூய திரித்துவ தேவாலயம் என்ற பெயரில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இந்த இரண்டாம் தேவாலய வைரவிழா 18.10.1979 அன்று பரப்பாடி சேகர் குரு இஸ்ரவேல் தனராஜ் அவர்களுடைய முன்னிலையில் நெல்லை பேராயர் மகாகனம் தானியேல் ஆபிரகாம் அவர் களது தலைமையில் மிகச் சிறப்பாக கொண்டாடப்பட்டது இந்த இரண்டாவது தேவாலயமும் கடந்த 5 ஆண்டுகளுக்கு முன்பாக முழுவதுமாக இடிக்கப்பட்டு பெரியதோர் தேவாலயம் பரப்பாடியில் கட்டப்பட்டு வருகிறது.

பண்ணையாரின் ஆதிக்கத்திலிருந்து பரப்பாடி மக்களுக்கு விடுதலை வாழ்வை பெற்றுத் தந்த Rev. சார்லஸ் ரேனியஸ் ஐயரவர்களை நன்றியோடு நினைவு கூறுவோம்.






ஜே.பர்னபாஸ், M.Sc.,
சேலம் வரலாற்றுச் சங்கம்

**கி.பி.**1827ஆம் ஆண்டு ஜீன் மாதம் லண்டன் மிஷனெரி சங்கத்தைச் சேர்ந்த திரு.டயர்மேன்,மற்றும் திரு.பென்னெட் ஆகியோர் (Mr.Tyerman, Mr.Bennet) சேலம் மாவட்டத்தை லண்டன் மிஷனெரி சங்கத்தின் மிஷன் பணித்தளமாக (Mission field)தேர்ந்தெடுத்தார்கள்.(Gazetteer of the Salem District -vol 1 part- 01 page no.100)

**கணவனும் மனைவியுமாக சேலம் வந்த முதல் திருத்தொண்டர்கள் - ஒரு துணிவின் சரிதை :**

சீர்திருத்த கிறிஸ்தவத்தின் முதல் நற்செய்திப் பணியாளர்களாக சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் (Rev.Henry Crisp L.M.S. first protestant missionary to Salem) தனது மனைவி திருமதி.எலிசா ஸ்டெப்பி (Mrs. Eliza Steffe) அம்மையாருடன் பல்லக்கில் பயணித்து பெங்களூருவிலிருந்து 1827 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 17ஆம் நாள் சேலம் வந்துசேர்ந்தார்.அப்பொழுது திருமதி.எலிசா ஸ்டெப்பி கர்ப்பிணியாக இருந்தார்.சாலை வசதிகள் முற்றிலும் இல்லாத அந்த நாட்களில் இவர்களின் இப்படிப்பட்ட பயணம் ஒரு ஆபத்தான துணிச்சல் மிகுந்த சாகசப் பயணமாகவே பார்க்கப்பட்டது.சேலம் நகருக்குள் அவர்கள் வந்தபோது அவர்களுக்கு சேலம் மாவட்ட கலெக்டர் ஒரு சிறப்பான வரவேற்பை அளித்தார்.

**சேலம் லண்டன் மிஷன்:**

சேலம் மாவட்ட கலெக்டரின் மாளிகையில் ஒரு மாதகாலம் சங்கை ஹென்றி கிறிஸ்பு மற்றும் அவரது மனைவியும் தங்கியிருந்தார்கள்.இந்த சேலம் கலெக்டர் மாளிகைக்கு எதிராக சேலம் கோட்டை மற்றும் சேலம் செவ்வாய்ப்பேட்டை பகுதிகளுக்கு இடையே பங்களாவுடன் கூடிய 30 ஏக்கர் நிலத்தை சேலம் லண்டன் மிஷன் பணித்தளத்தின் பயன்பாட்டிற்காக தொலைநோக்கு பார்வையுடன் அன்று சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் ரூ.4,200/-க்கு வாங்கினார்.

**சேலம் - ஆரம்ப கல்வியின் தந்தை**

(Father of primary education in Salem):

சேலம் மாவட்ட கலெக்டராக அப்பொழுது பதவிவகித்த திரு.எம்.டேவிட் கோபர்ன் (Mr.M.David Cockburn -period of service -1820-29)என்பவர் தான் ஏற்கெனவே சேலத்தில் துவக்கியிருந்த நான்கு பள்ளிக்கூடங்களையும் சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயரிடம் ஒப்படைத்து, அவைகளை நடத்தச் சொல்லிக் கேட்டுக்கொண்டார்.இந்தப் பள்ளிகளில் அப்பொழுது ஆங்கிலம், தெலுங்கு, மராத்தி, மற்றும் பெர்சியன் ஆகிய நான்கு மொழிகள் கற்றுத்தரப்பட்டது.இந்த

நான்கு பள்ளிகள் இல்லாமல் வேறு சில பள்ளிக்கூடங்களையும் ஐயர் சேலத்தில் துவக்கி சிறப்புடன் நடத்திவந்தார்.இதனால் சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயரை சேலம் ஆரம்ப கல்வியின் தந்தை என அழைத்தார்கள்.

கல்விப்பணிகளுக்கு இடையே அன்றைய சேலம் நகரில் நற்செய்தி அறிவிப்புப் பணிகளையும் சங்கை ஹென்றி கிறிஸ்பு சிறப்பாக மேற்கொண்டுவந்தார். குறிப்பாக, சேலம் செவ்வாய்ப்பேட்டையில் வாராந்திர சந்தை கூடும் நாட்களில் அங்கே நற்செய்தி பிரசங்கம் செய்வது,துண்டுபிரசுரங்களை வினியோகிப்பது போன்ற பணிகளையும் ஐயர் செய்துவந்தார்.ஏழைகளுக்கு உணவளிக்கும் அன்னதான திட்டத்தையும் சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் சேலம் மாவட்ட கலெக்டருடைய உதவியுடன் அப்பொழுது சேலத்தில் தொடர்ந்து செய்துவந்தார்.

**சேலம் – சீர்திருத்த கிறிஸ்தவத்தின் துவக்கம்:**

நற்செய்தி அறிவிப்பு பணிகளிலும்,கல்விப் பணிகளிலும் சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயருக்கு உதவி செய்வதற்காக பெங்களூருவிலிருந்து இரண்டு தமிழ் கிறிஸ்தவர்கள் சேலம் வந்து சேர்ந்தனர்.அவர்களின் உதவியால் கல்விப்பணியும், நற்செய்திப்பணியும்,சிறப்பான முறையில் நடந்துவந்தது.சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் சேலம் வந்துசேர்ந்த நான்கு மாத காலத்திற் குள்ளாகவே சேலம் மிஷன் வளாகத்தில் ஒரு பள்ளிக்கூட அறையில் ஞாயிறு தேவாராதனையை (Sunday Church Service) 3 - 2 - 1828 அன்று மாலை துவக்கினார்.இதையேசேலம் மாவட்டத்தில் சீர்திருத்த கிறிஸ்தவத்தின் பிறந்தநாள் என்று சொல்லலாம் என்று சங்கை T.C.விட்னி ஐயர் தனது 'A Hundred Years of Salem Mission History, 1936.'என்ற நூலில் குறிப்பிடுகிறார்

**சேலத்தின் முதல் பெண்கள் பள்ளிக்கூடம்:**

கி.பி.1829 ஆம் ஆண்டு அன்றைய சேலம் நகரில் பெண்களுக்கான ஒரு முதல் பள்ளிக்கூடம் ஒன்று சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயரின் துணைவியார் திருமதி.எலிசா ஸ்டெப்பி அவர்களால் துவக்கப்பட்டது.பள்ளிக்கூடத்தை நடத்துவதில் திருமதி.எலிசா ஸ்டெப்பி அம்மையாருக்கு உதவியாக இருப்பதற்காக தமிழ்,தெலுங்கு,மற்றும் ஆங்கிலம் தெரிந்த ஒரு தமிழ்பெண் சித்தூரிலிருந்து அழைத்து வரப்பட்டார்.ஆனால், அந்தோ!பரிதாபம் !அந்த தமிழ் பெண்ணும் தனது பணியைத் துவக்கி ஐந்து நாட்களே கடந்த நிலையில் காலரா என்ற கொடிய கொள்ளை நோயினால் தாக்கப்பட்டு அகால மரணமடைந்தார்.(Men's Report -Salem -1927 by Rev.W.J.Hatch L.M.S.)அதன் பின்பு ஒருசில மாதங்களிலே சேலத்தில் பெண்கல்வி முயற்சிகளின் முன்னோடியாக திகழ்ந்த திருமதி.எலிசா ஸ்டெப்பி அம்மயாரும் தனது இரண்டாவது மகளை பெற்றெடுத்த நிலையில் நோயுற்று 7-5-1829அன்று மரணமடைந்தார்.இப்படியாக சேலம் நகரில் பெண்கல்வி முயற்சிகளின் முன்னோடிகளாகத் திகழ்ந்த இந்த இரண்டு பெண்மணிகளும் ஒரு இருள் சூழ்ந்த லோகத்தில் பெண்களுக்கு கல்வி கண் திறக்கும் விடுதலை புரட்சியின் துவக்கத்தில் சேலத்தில் களப்பலியானார்கள்.

**அன்றைய சேலம் நகரின் முதல் தேவாலயம்:**

தனது ஆங்கிலேய நண்பர்களிடம் பெற்ற உதவிகளைக் கொண்டு சேலம் நகரின் முதல் தேவாலயத்தை சேலம் மிஷன் வளாகத்தில் சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் 22-12-1830 அன்று கட்டத்துவங்கினார்.இன்றைக்கு காணப்படும் சங்கை மூ.னி.லெக்லர் ஐயர் கல்லறைக்கு முன்பாக சேலம் செவ்வாய்ப் பேட்டைக்குச் செல்லும் பிரதான சாலையோரத்தில் (சேலம் தீயணைப்பு நிலையம் எதிரில்)இந்த தேவாலயம் இருந்தது.அந்த தேவாலயம் மிக எளிமையாக நாட்டு ஓடுகள் வேயப்பட்ட கூரையும்,செங்கல் சுண்ணாம்பு காரை கட்டுமானமுமாக இருந்தது.அந்த ஆலயம் 19அடிக்கு 34 அடி



நடுமண்டபம்(Nave),இருபுறமும் 7அடி தாழ்வாரம்(Verandha),முன்பாக ஒரு முற்றம் (Porch)இப்படித்தான் அன்றைய சேலம் நகரின் முதல் தேவாலயம் இருந்தது.

இந்த நிலையில் சேலம் அம்மாபேட்டை பகுதியில் இயேசுவை அறிவிக்கும் நற்செய்திப் பணியின் போது சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் கல்லெறிந்து தாக்கப்பட்டார்.இதனைத் தொடர்ந்து சுகவீனப்பட்ட ஐயர் படுத்த படுக்கையானார்.சேலம் நகரின் முதல் தேவாலய கட்டுமான பணிகள் முடிந்து பிரதிஷ்டை தினமும் வந்தது.நோயின் தீவிரம் அதிகரிக்கவே தன்னால் புதிய ஆலய பிரதிஷ்டை விழாவை நடத்திட முடியாது என்பதை அறிந்த சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் தனது தம்பி சங்கை எட்மண்ட் கிறிஸ்பு ஐயரை (Rev.Edmund Crisp L.M.S.) சேலம் வரவழைத்து அவரைக் கொண்டு புதிய ஆலய பிரதிஷ்டை விழாவை நடத்தினார்.அந்த நாள் 31-7-1831 புதிய ஆலய கட்டிடத்திற்குள் கூடியிருந்த புதிய

விசுவாசிகள், நண்பர்கள், பொதுமக்கள் மத்தியில் எழுந்து நின்று தனது புதிய ஆலய பிரதிஷ்டை தின செய்தியை சங்கை எட்மண்ட் கிறிஸ்பு ஐயர் வழங்கினார். அது 'என்னுடைய வீடு எல்லா ஜனங்களுக்கும் ஜெப வீடு ' என்ற வேதாகம வசனத்தின் அடிப்படையில் அமைந்திருந்தது. (மாற்கு11:17)
அன்றைய சேலம் நகரின் முதல் தேவாலயத்தின் சிறப்பான பிரதிஷ்டை விழாவினை தனது அறைவீட்டின் ஜன்னல் வழியாகப் பார்த்து ஆனந்தக் கண்ணீர்விட்ட சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் அந்த விடுதலைப் பணியின் வெற்றி நாளின் இறுதியில் தனது நாட்குறிப்பில் இப்படி எழுதிவைத்தார்: 'இது போன்றதொரு நாளைக் காண என்னை அனுமதித்த என் ஆண்டவருக்கு நன்றி! '(Thank God for being allowed me to witness such a day) என்று. நோயின் பிடியிலிருந்து மீளாத சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் 28-10-1831ல் கோதுமை மணியாக சேலம் மண்ணில் மடிந்து திருச்சபையின் வித்தாக விதைக்கப்பட்டார். அப்பொழுது அவருக்கு வயது 28!

**சாட்சியாக நிற்கும் கல்லறைகள்:**

சேலம் கலெக்டர் அலுவலகம் எதிரே அமைந்திருக்கும் சேலம் பழைய ஆங்கிலேயர் கல்லறைத் தோட்டத்தில் தனது அன்பான மனைவியும், சேலத்தில் பெண்கல்வி முயற்சிகளின் முழுமுதல் முன்னோடியாகத் திகழ்ந்த கல்வியாளர் திருமதி.எலிசா ஸ்டெப்பி அம்மையாரின் கல்லறை அருகே உயிர்தெழும் நாளுக்காக விதைக்கப்பட்டார். சேலத்தின் ஆதி அப்போஸ்தலர்களான இந்த இரண்டு திருத்தொண்டர்களின் கல்லறைகளையும் சிறப்பாக அடையாளப்படுத்தி, அவர்களைப் பற்றிய சிறப்பு செய்திகளோடு கல்லறைத் தோட்டத்தின் நுழைவு வாயிலின் அருகே 23-1-2013 அன்று சேலம் வரலாற்றுச் சங்கத்தினரின் முயற்சிகளால் எழுப்பப்பட்ட புதிய வழிகாட்டி நினைவுச் சின்னத்தில் (Guide Memorial Pillar) சேலத்தில் பெண்கல்வி முயற்சிகளுக்கு முன்னோடியாகத் திகழ்ந்த திருமதி.எலிசா ஸ்டெப்பி அம்மையாரின் கல்லறையை 'கிறிஸ்தவ மிஷனெரிகளின் கல்லறைகள்' என்ற தலைப்பில் வரிசை எண் 13, மரணம் 1829, திருமதி.எலிசா ஸ்டெப்பி-சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயரின் மனைவி -சேலத்தில் பெண்கல்வி முயற்சிகளின் முன்னோடி (Christian Missionaries,Sl.No.13, 1829,Eliza Steffe-wife of Rev.Henry Crisp -pioneer of women's education in salem) என்று அடையாளப்படுத்தி நன்றி பாராட்டினோம். அதேபோல, ஐயரின் கல்லறைக்கும் - வரிசை எண் 14, மரணம்1831, சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர், லண்டன் மிஷனெரி சங்கம், சேலம் வந்த முதல் சீர்திருத்த கிறிஸ்தவத் திருத்தொண்டர் (Sl.No.14,1831,Rev.Henry Crisp,L.M.S.,First Protestant Missionary to Salem) என்று குறிப்பிட்டு எங்கள் நன்றிகளை உரித்தாக்கினோம்.

## பொட்டல்பட்டி சேகரத்தின் தவச உற்சவ தோத்திரப் பண்டிகையின் வரலாறு



அற்புதராஜ் , பொட்டல்பட்டி

பொட்டல்பட்டி சேகரத்தின் "நூற்றாண்டு தவச உற்சவ தோத்திரப் பண்டிகையயை" நாம் ஆசரித்துக் கொண்டிருக்கிறோம். அவ்வாறு பண்டிகையை ஆசரிக்கும் நாம் நமது சேகரத்தின் தவச உற்சவ தோத்திரப் பண்டிகையின் வரலாற்றையும் சற்று சிந்தித்து பார்க்க வேண்டியது நமது கடமையாகும். வருடந்தோறும் நமது சேகரத்தின் தவச உற்றவ தோத்திர பண்டிகையை ஆங்கில மாதம் ஜீலை நான்காம் வாரத்தில், தமிழ் ஆடி மாதம் கொண்டாடி கொண்டிருக்கிறோம். 99 வருடங்களுக்கு முன்பதாக 1919ம் ஆண்டு ஜீலை மாதம், இரண்டாம் வாரத்தில் தமிழ் ஆனி மாதத்தில் நம் முன்னோர்கள் அப்போதைய குருவானவர் அருள்திரு. J.D.டேர் ஐயரவர்களின் ஆலோசனையின்படியும், நமது திருமண்டல தோத்திர பண்டிகையைப் போலும் முதல் நாள் சிலுவைக் கொடியேற்றத்துடன் மூன்று நாள் பண்டிகையை ஆசரிக்கத் தொடங்கினார்கள். ஆனி மாதம் என்பது ஒரு சிறப்பு மிக்க மாதமாகவும், மற்றும் ஆனி மாதம் என்றாலே நம்மைப் படைத்த கடவுளை தொழுதுகொண்டு, வயல்விளைச்சல்களை சிறப்பாக விளையச் செய்து ஆசீர்வாதமிக்க அறுவடை கிடைத்ததற்காக கடவுளுக்கு நன்றி செலுத்த நம் முன்னோர்கள் கிறிஸ்துவை அறியாத நாட்களில் பாரம்பரியமாக கடவுளுக்குப் பண்டிகையை ஆசரித்து வந்துள்ளனர். கிறிஸ்துவுக்குள் வந்த பின்பும் நம் முன்னோர்கள் அந்த குறிப்பிட்ட நாள்களில் தங்கள் பழைய வழியில் தங்களது உறவினர்கள் மற்றும் நண்பர்களுடன் இணைந்து அதே மாதிரியான வழியில் சென்றுள்ளனர். நம் முன்னோர்கள் அறியாமையால் அவ்வாறு மீண்டும் வழிதப்பி விடாதபடி உண்மையான தெய்வமாகிய சர்வ வல்லமையுள்ள ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவை மகிமை படுத்தும் படியாக நமது சேகர அளவில் பொட்டல்பட்டியை மையமாக வைத்து 'தவச உற்சவ தோத்திரப் பண்டிகையை' ஆசரிக்கத் தொடங்கி, வருடந்தோறம் இயேசுகிறிஸ்தவின் நாம மகிமைக்காகவும், மற்றும் நம் முன்னோர்களையும், பூர்வ நாட்களை நினைவுகூறவும், ஆண்டவரோடு நாம் செய்த உடன்படிக்கையை மற்றும் ஆண்டவரோடு உள்ள ஐக்கிய உறவை புதுப்பித்துக் கொள்ளவும் மற்றும் நம் உறவினர்கள், நண்பர்கள், ஆகியோர்களை நலம் விசாரித்து மூன்று நாள்கள் அவர்களோடு ஒருமித்து ஆண்டவரை ஆராதித்து மகிமைப்படுத்தவும் இப்பண்டிகையை ஆசரித்து வருகிறோம்,
தவச உற்சவம் என்பது விளை நிலங்களின் விளைவின் பலன்கள், விளைச்சல்களை அறுவடை செய்தல், நல்ல விளைச்சலை அறுவடை செய்ய கர்த்தர் செய்த கிருபைக்காகவும் அவருடைய நாம மகிமைக்காகவும் வருடந்தோறும் நமது பொட்டல்பட்டி சேகர அளவில் தவச உற்சவ தோத்திர பண்டிகையை ஆசரித்து வருகிறோம்.
இன்னும் தொடர்ந்து வரக்கூடிய காலங்களிலும் இப்படிப்பட்டதான மகிமையான பண்டிகையைத் தொடர்ந்து கர்த்தருக்கென்று குடும்பமாய் ஆசரிக்க கர்த்தர் தாமே நம் ஒவ்வொருவருக்கும் கிருபை செய்வாராக. ஆமென்!!! ஆமென்!

# ராவ்சாகீப்



அருட்திரு. பேராசிரியர். மா. தேவராஜ்

# சாமுவேல் பவுல் ஐயர்

அன்றைய ஒருங்கிணைந்த திருநெல்வேலி மாவட்டம் இன்றைய தூத்துகுடி மாவட்டம் தென்கரை வட்டத்தற்குட்பட்ட மெய்ஞானப்புறத்திற்கு அண்மையில் நீர்வளம் பொருந்தின மாந்தோப்புகள் நிறைந்த 'பாட்டக்கரை' எனற கிராமத்தில் அருட்திரு தானியேல் அவர்களுக்கு 1844 ஆம் ஆண்டு ஜீன் மாதம் 15 ஆம் தேதி சாமுவேல் பவுல் அவர்கள் பிறந்தார். இவர் தம் பெற்றாருக்கு ஆறாவதாக பிறந்த ஒரே ஆண் குழந்தை, (இவருக்கு முன் தானியேல் அவர்களுக்கு ஐந்து பெண்குழந்தைகல் இருந்தனர்) இவரது தகப்பனார் திருச்சபை அருட்பணி சங்கத்தின் குருவானவராக பணியாற்றி வந்தவராவார்.

சாமுவேல் பவுல் அவர்களின் தகப்பனார் 1860 ஆம் ஆண்டு மரணம் அடைவதற்கு சற்று முன்னர் தம் மகன் சாமுவேல் பவுலை அழைத்து, "என் மகனே, தேவன் உன்னை வாலாக்காமல் தலையாக்குவார், நீ கீழாகமல் மேலாவாய்" என்று சிறப்பான ஆசீரை வழங்கினார் அதேப் போல் இவரும் ஆசீர்வாதமாகவே வாழ்ந்தார்.

சாமுவேல் பவுல் ஆரம்பக் கல்வியை பாட்டக்கரை பள்ளியில் படித்தார். மேலும் மாலை நேரங்களில் இவரது தந்தை இவருக்கு சிறு ஜெபங்கள் கற்றுக் கொடுத்து ஜெபிக்கச் சொல்வார். ஜெபம் தவறும் நாட்களில் சாப்பாடு குறைக்கப்படும் என்று ஒரு தண்டனையும் உண்டு. வேதப்பாடமும் சொல்லிக் கொடுப்பார். இவர் தமது ஏழாம் வயதில் மோசேயின் ஐந்தாகம நூல்களை மனனம் செய்திருந்தார். கிறிஸ்து நாதருடைய வாழ்க்கை வரலாறு இவருக்கு கதைவடிவில் சிறப்பாக சொல்லிக் கொடுக்கப்பட்டது. இவருக்கு எட்டு வயதிருக்கும் போது மெய்ஞானப்புரத்தில் இருந்த உண்டு உறையும் ஆண்களுக்கான பள்ளியில் ஆங்கிலமும் தமிழும் கற்றுக் கொள்ள சேர்க்கப்பட்டார். ஒவ்வொரு மாதமும் தகப்பனார் பள்ளியில் தம் மகனைக் கண்டு உரையாடிப் பின் மகனோடு இணைந்து



முழங்காலில் இருந்து ஜெபித்து வருவார்.

இவர் தம் பதினேழாம் வயதில் அதாவது 1861 ஆண்டு மெய்ஞானப்புரம் விடுதியிலிருந்து பாளையங்கோட்டை பிரப்பிராண்டி (கல்லூரி) அனுப்பப்பட்டார். அங்கு அருட்திரு சார்சென்ட் அவர்களின் கீழ் திருமறைக் கல்விப் கற்றார். கல்விக் கற்கும் காலத்திலேயே அருட்திருவாளர்கள் பென் மற்றும் மக்டானல்ட் போன்றோர்களுடன் திருப்பணிச் செய்தார். அதனால் அதிகமாக இறை வார்த்தையையும் இறைப்பணியைக் குறித்தும் கற்றுக் கொண்டார். 1863 ஆம் ஆண்டு மே மாதம் சிறப்பு மதிப்பெண்களுடன் தேர்ச்சிப் பெற்றார். அருட்திரு ராக்லாண்டு அவர்களின் தியாக வாழ்வு இவரது வாழ்வில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது.

இவர் குருப் பயிற்சி முடித்து முதல் முதலாக 1863 இல் மெய்ஞானப்புரம் குருசேகரத்திற்குட்பட்ட சத்திய நகரிலும், 1864 ல் கிருபைப்புரத்திலும் அருட்பொழிவுப் பெறாத குருவானவராக பணியாற்றினார். கிருபைப் புரததில் பள்ளி ஆசிரியராகவும் பணியாற்றினார். மாதந்திர ஊழியர்கள் கூடுகையில் இவரது பிரசங்கத்தினை கேட்டு அருட்திரு ஜே.தாமஸ் அவர்கள் மகிழ்வுறுவதாக தம் குறிப்பில் குறிப்பிட்டுள்ளார். 1865 ஆம் ஆண்டு சென்னைக்கு மாற்றலானார். அங்கு அருட்திரு உ.தோ. சத்தியநாதன் அவர்களுடன் இணைந்து பணியாற்றினார்.

இவர் 1868 ஆம் ஆண்டு அருட்திரு பரமானந்தம் சிமியோன் அவர்களின் மகளை திருமணம் செய்தார். அதனைத் தொடர்ந்து சி.எம்.எஸ் பள்ளி தாளாளர் அருட்திரு ஆர். மெக்டானல்ட் அவர்களுடன் பணியாற்றினார். 1971 ஆம் ஆண்டு குருத்துவ அருட்பொழிவுக்காக தேர்வுச் செய்யப்பட்டார். 1874 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 11 ஆம் தேதி பேரருட்திரு. ஜெல் அவர்களால் திருச்சிராப்பள்ளியில் உதவி குருவாக அருட்பொழிவுச் செய்யப்பட்டு, நீலகிரி மாவட்டம் உதகமண்டலத்திலுள்ள தூய திரித்துவ தேவாலயத்தின் குருவாக நியமிக்கப்பட்டார்.

1874 ஆம் ஆண்டு குருத்துவ அருட்பொழிவுக்குப் பின் நீலகிரி மாவட்டம் உதகமண்டல திருச்சபையின் பொருப்பை ஏற்று சுமார் ஒன்பது ஆண்டுகள் மிகச் சிறப்பாக திருப்பணியாற்றினார். இவரது காலத்தில் உதகமண்டல திருச்சபையின் திருப்பணியின் பலனாக திருச்சபையின் வளர்ச்சி மிகச் சிறப்பாக இருந்தது எனில்

அது மிகையாகிடாது. 1874 ல் இவர் பொறுப்பெடுத்தப்போது 230 பேராக இருந்த திருச்சபையின் மக்கள் தொகை 474 ஆக உயர்ந்து 100 விழுக்காடு உயர்ந்தது. இரண்டு கிளைச் சபைகள் கூடுதலாக கட்டப்பட்டது. இவரது நாட்களில் கூடலூர், தேவாலா, மற்றும் நடுவட்டம் ஆகிய இடங்களில் திருச்சபை திருப்பணிகள் தொடங்கப்பட்டது.

குன்னூர் தூய யோவான் தேவாலயம் அமைவதற்கு முன்னோடியாக இருந்தார். "உதகமண்டலத்தில் வேலைக்கார அருட்பணி" என்ற ஒரு புதிய அருட்பணியினை நிறுவினார். உதகமண்டலத்தில் ஹோபார்ட் பள்ளி வளாகத்தில் பிற சமயத்தவர்களுக்கென சிறப்புக் கூட்டங்களை இரு வாரத்திற்கு ஒரு முறை நடத்தினார். மேலும் வார சந்தைக் கூடும் நாட்களில் திறந்த வெளி நற்செய்திப் பணி செய்தார். பௌர்ணமி அன்று இரவு திறந்த வெளி பிரசங்கங்கள் நடத்தப்பட்டன. சிறைச் சாலைத் திருப்பணியும் இவரால் சிறப்பாக செய்யப்பட்டது. இதனால் சின்னதம்பி பிள்ளை என்பவர் தன் குடும்பத்துடன் கிறிஸ்துவின் அடியார் ஆனார்.

1882 ஆம் ஆண்டு பேராயர். ஜெல் அவர்களின் ஆணைக்கிணங்க கள்ளிக்கோட்டை தமிழ் திருச்சபையின் திருப்பணிகளை கண்காணிக்கச் சென்று சிறப்பான திருப்பணி மேற்கொண்டார்.

1883 ஆம் ஆண்டு முதல் நான்கு ஆண்டுகள் சென்னை டக்கர் தேவாலயத்தின் குருவானவராக திருப்பணியாற்றியாற்றி, 1887 ஆம் ஆண்டு திருநெல்வேலிக்கு மாற்றம் அடைந்துச் சென்றார்.

இவர் திருநெல்வேலியில் திருப்பணியாற்றியக காலத்தில் பல்வேறு திருச்சபை சார்ந்த பொறுப்புகளையும் ஏற்றுக் கொண்டார். 1893 இல் அனைத்துலக அருட்பணியின் கூட்டங்களில் சிறப்பு அழைப்பாளராக பங்குக் கொண்டார். 1894 ஆம் ஆண்டு சென்னை பேராயத்தின் பேராயர்களின் கௌரவ குருவாக (சாப்பிளினாக) நியமிக்கப்பட்டார். எனவே இவர் திருநெல்வேலியின் பேராயர் மோர்ளினுக்கு சாப்பிளினாக திருப்பணியாற்றினார். தமிழ் ஜெப புத்தகம் மற்றும் ஞானப் பாட்டுப் புத்தகங்களையும் திருத்த ஒரு உருப்பினராக நியமிக்கப் பட்டார். ஸ்ரீவில்லிப்புத்தூர் வட்ட உருப்பினராகவும், திருநெல்வேலி மாவட்ட போர்ட் உருப்பினராகவும் மக்கள் பணியாற்றி வந்தார்.

இவர்தான் முதல் முதலாவதாக 1891 ஆம் ஆண்டு "தவச உற்சவம்" என்ற ஒரு திருவிழாவினை (கிறிஸ்தவ பண்டிகை) சாட்சியாப்புரத்தில் ஏற்படுத்தினார். பின் நாட்களில் இத் திருவிழா பல பகுதிகளில் மக்களால் சிறப்பாக கொண்டாடப்பட்டது என்றால் அது மிகையாகிடாது.

இவர் பலத்தரப்பட்ட தலைப்புகளில் பலத்தரப்பட்ட மக்களுக்காக எழுதியுள்ளார். அவைகளில் 38 நூல்களை தாமாகவும், 23 நூல்களை தமிழில் ஆங்கிலத்திலிருந்து மொழிப்பெயர்த்துமுள்ளார். மட்டுமல்லாது 27 ஒற்றைத் தாள் பிரதிகளையும் எழுதியுள்ளார். மோட்சபிரயாணம், தியான ஆலயம், ஆத்தும நேசரின் அங்க மகத்துவம் போன்ற இவரது நூல்கள் மக்கள் மனதில் இன்றும் நீங்க நினைவில் நிற்கின்றது. மேலும் திருநெல்வேலி பேராயத்தின் மாத இதழான "நற்போதகத்தின்" இதழாசிரியராக இருந்துச் சிறப்புடன் செயல்பட்டார். எழுதிய நூல்களை அங்கிகரித்து அவருக்கு 1898 ஆம் ஆண்டு இவருக்கு "ராவ்சாகீப்" என்ற உயரிய விருதை (பட்டத்தை) பிரிட்டீஸ் இந்தியாவின் கவர்னர் ஜெனரல் அவர்களால் இங்கிலாந்து பேரரசியாரின் சார்பாக வழங்கினார்கள். "ராவ் சாகீப்" என்ற விருது இன்றைக்கு 'பத்மஸ்ரீ' அல்லது 'பத்மபூஷன்' போன்ற விருதுகளுக்கு சமமாகும். ராவ் சாகீப் என்றால் தைரியசாலியான பிரபு (Roa Bahadur = Roa - Prince, Bahadur = brave or Most honorable) என்றுப் பொருள்படும். 1899 ஆம் ஆண்டு மே மற்றும் ஜீன் மாதங்களில் சிவகாசியில் பெரும் கலகம் உண்டா னப்போது அந்த சூழல் மாற இவர் அமைதியாக்கப் பெரும் பங்காற்றினார்.

திடீரென ஏற்பட்ட வியாதியினால் 1890 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 11 ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை மாலை ஒரு மணி அளவில் தமது பரம இளைப்பாறுதலுக்குள் சென்றார். இவரது உடல் சாட்சியாப்புரம் கல்லறைத் தோட்டத்தில் உயிர்தெழுதலின் நம்பிக்கைக்காக நல்லடக்கம் செய்யப்பட்டுளது.

## உங்களின் புத்தகங்களை கொடுத்து தாங்கிடுங்கள்

## இது உங்கள் நூலகம்

திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் சார்பாக விரைவில் உதயமாக இருக்கும் நூலகத்திற்கு பல்வேறு கிறிஸ்தவ பழைய புத்தகங்களை வரவேற்கின்றோம். அதன்படி உங்களிடம் உள்ள பழைய புத்தகங்களை வரலாற்று சங்கத்திற்கு நன்கொடை கொடுத்து உதவினால் வரலாற்று சங்க நூலகத்தில் உங்களுடைய குடும்ப பெயரில் அல்லது ஞாபகார்த்த பெயரில் ஒரு செல்ஃப் உருவாக்கப்படும். கிறிஸ்தவ வரலாற்று சங்கம் முன்னாள் ஊழியர்களை குரு வானவர்களை கவுரவப்படுத்த ஒரு புதிய முயற்சி அதே நேரத்தில் வருங்கால சந்ததிக்கு பொக்கிஷத்தை பாதுகாத்து கொண்டு போகவேண்டிய கடமையும் நமக்கு உண்டு. இதன் மூலம் ஆபிரகாம் பண்டிதர் நினைவு இணைய மின்னணு ஆய்வு நூலகத்தில் உங்களுக்கு சிறப்பு சலுகைகள் வழங்கப்படும்.

